For private circulation only

Book Post

www.tchsportal.co.in

# கிறிஸ்தவ வரலாற்றுச் சுவடுகள்

விலை : ரூ 60

திசை தெரியாமல் திகைக்காதிருக்க திருச்சபை வரலாறு தெரியவேண்டும்

அக்டோபர் 2021 இதழ் 17



கிறிஸ்தவ
# வரலாற்றுச் சுவடுகள்

மாத ஆய்விதழ் சந்தா விபரம்

| சந்தா விபரம் | உள்நாடு |
|---|---|
| தனிப்பிரதி | ₹ 60 + நன்கொடை |
| ஆண்டு சந்தா | ₹ 600 + நன்கொடை |
| ஐந்து ஆண்டு சந்தா | ₹ 3000 + நன்கொடை |

**“கிறிஸ்தவ வரலாற்றுச் சுவடுகள்”**
**மாத ஆய்விதழை**
**நீங்கள் தொடர்ந்து பெற்றுக் கொள்ள**
**G-Pay மூலம் நன்கொடை செலுத்த**
**91767 80001**
**என்ற எண்ணுக்கு செலுத்தவும்**
**காசோலை மற்றும் வரைவோலை செலுத்த**
**‘திருநெல்வேலி கிறிஸ்தவ வரலாற்றுச் சங்கம்’**
**Tinnevelly Christian Historical Society**
**என்ற பெயரில் எடுக்கவும்**

**சந்தாவை வங்கி கணக்கில் செலுத்த**

**Bank :- Federal Bank**
**Name :- Tinnevelly Christian Historical Society**
**Account number :- 17480200003684**
**IFSC Code :- FDRL0001748**



**கிறிஸ்தவ வரலாற்றுச் சுவடுகள்,**
**கதவு எண் 2-2-3[4], வடக்குத்தெரு,**
**பங்களாச் சுரண்டை-627859,**
**தென்காசி மாவட்டம் [தமிழ்நாடு]**
**04633 290401**

christianhistorical@gmail.com

+91 91767 80001
+91 75388 12218

04633 290401

**tchsportal.co.in**


# ஆசிரியர் சுவடு

கிறிஸ்துவுக்குள்பிரியமானவரலாற்றுப்பிரியர்களே, ஆண்டவராகிய இயேசு கிறிஸ்துவின் நாமத்தில் அன்பின் வாழ்த்துக்கள். பல நூற்றாண்டுகளாக கல்வி என்பது உயர்குலத்துக்கு மட்டுமே உரியதென்ற அநீதி இந்திய தேசத்தின் அனைத்து பகுகளிலும் பரவிக்கிடந்தது. சமுதாயம் சீரற்ற நிலையில் மூட பழக்கவழக்கங்களுக்கும், அடிமைத்தனத்திற்கும் உள்ளாகியிருந்தது. வெளிநாட்டிலிருந்து இந்திய தேசம் வந்த சுவிசேஷ வேட்கை கொண்ட மிஷனெரிமார்களின் பார்வை சமூகத்தின் தேவையுணர்ந்து செயலாற்ற தொடங்கியது. அரசாங்கமே ஒழிக்க தடுமாறிய பல மூடப்பழக்கவழக்கங்களை மேலை நாட்டு மிஷனெரிகள் கல்வியெனும் ஒளிச்சுடரை எத்திசையெங்கும் பரம்பச்செய்து ஒழித்துக்கட்டினர். மிஷனெரிகளின் சுவிசேஷச் சேவையினை உற்று நோக்குவோமானால், கல்விப்பணி சுவிசேஷப்பணியின் ஓர் அங்கமாக பயணித்ததை அறியலாம். உலகின் பலதரப்பட்ட பகுதிகளிலும் அரும்பணியாற்றிய மிஷனெரிமார்கள், கல்விச்சாலைகள் அமைத்து எவ்வித பாகுபாடுமின்றி அறிவைப் புகட்டினர். இந்தியாவின் கல்விப்பணியின் முன்னோடியாக திகழ்ந்த மிஷனெரிமார்களின் கல்விச்சேவை தற்கால கல்விக்கட்டமைப்பிற்கு அடித்தளமிட்டுள்ளது உண்மை. மிஷனெரிகளின் ஆக்கப்பூர்வமான கல்விப்பணியினை தெளிவுற எடுத்துறைக்கும் பிரதியாக இவ்விதழ் அமைந்துள்ளது. அடுப்பூதும் பெண்களுக்கு படிப்பெதற்கு என்ற நிலையை மாற்றி அவர்களுக்கும் கல்வியைக் கொடுத்தது மிஷனெரிகள் தான்.

அடுத்த மாத இதழுக்காக **“மூடபழக்கவழக்கங்களும் - மீட்டெடுத்த மிஷனெரிகளும்”** என்ற தலைப்பில் ஆராய்ச்சிக் கட்டுரைகளை அனுப்ப கேட்டுக்கொள்கிறேன். உங்கள் பகுதியில் காணப்பட்ட மூடப்பழக்க வழக்கங்களை மிஷனெரிகள் எப்படி நீக்கினார்கள் என்பதை வரலாற்று சான்றுகளுடன் எழுதி அனுப்ப கேட்டுக் கொள்ளுகின்றேன். வரலாற்றுச் சுவடுகள் பத்திரிக்கையினை உங்கள் நண்பர்களுக்கு அறிமுகம் செய்யுங்கள். உங்கள் உதாரத்துவமான நன்கொடையினாலும், காணிக்கைகளினாலும் தாங்க உங்களை அன்போடு கேட்டுக் கொள்ளுகின்றேன்.

மன்னா செல்வகுமார்


**பதிப்பாசிரியர் : மன்னா செல்வகுமார்**

**வடிவமைப்பு : சுஜித் ரெக்ஸ்**



# ஆதரவற்றவர்களை அரவணைத்து ஆளாக்கிய அன்னலின் அன்பு

தென்னகத்தின் ஆக்ஸ்போர்டு என்றழைக்கப்படும் திருநெல்வேலி, இருநூறாண்டுகளுக்கு முன்பதாகவே கல்விப் பணிக்கு மிகுந்த முக்கியத்துவம் கொடுக்கப்பட்ட பகுதியாகும். 1790ம் ஆண்டு கிழக்கிந்திய கம்பெனியினரால் திருநெல்வேலி மாவட்டமாக உருவாக்கப்பட்டு, பிற்காலங்களிலே 1801ம் ஆண்டுகளிலே, திருநெல்வேலி பிரிட்டிஷ் விக்டோரியா மகாராணியின் ஆளுகைக்குள்ளாக சென்றது. கிழக்கிந்திய கம்பெனியின் ஆதிக்கம் இந்திய தேசத்திலே தலைத்தோங்கியிருந்த படியினால் 1813ம் ஆண்டு வரை மிஷனெரிகள் சுதந்திரமாக ஊழியம் செய்வதற்கு அனுமதியில்லாமலேயே இருந்தது. இரட்டை நகரம் என்றழைப்படும் பாளையங்கோட்டை மற்றும் திருநெல்வேலி ஆகிய இரண்டு பகுதிகளும் பல கல்வி நிறுவனங்களைத் தன்னகத்தே கொண்டதாகும். நெல்லை அப்போஸ்தலன் என்றழைக்கப்படும் கனம் ரேனியஸ் ஐயரவர்களின் ஊழியத்தினால் பல பள்ளிக்கூடங்கள் திருநெல்வேலி மாவட்டம் மற்றும் அதின் சுற்றுபுற நகரமெங்கும் பரவியது.

திருநெல்வேலி மிஷனில் முதல் பள்ளிக்கூடம் பிராமண குலத்தைச் சார்ந்த குளோரிந்தா அவர்களால் 1787ல் ஆரம்பிக்கப்பட்டது. ஆரம்பக்கல்விக்கு வித்திட்ட உன்னதர் கனம். C.T.E. ரேனியஸ் எனலாம். அவர் திருநெல்வேலி பகுதியில் பணிசெய்த காலத்தில் தான் அதிகபடியான பள்ளிக்கூடங்கள் ஆரம்பிக்கப்பட்டன. **'அனைவருக்கும் கல்வி'** என்பதே அந்நாட்களில் மிஷனெரிகளின் கொள்கையும், வாஞ்சையுமாக இருந்தது. குலத்தொழில் செய்வதே போதுமானது என்றிருந்த காலத்தில் பள்ளிக்கூடம் சென்று கற்கவேண்டுமென்கிற அவசியத்தை முதலாவது கற்றுக்கொடுத்தவர்கள் மிஷனெரிகள்.

வெறும் கல்விமட்டுமல்லாது, வாழ்வும் கூட காப்பாற்றப்பட்டு, கற்று கொடுக்கப்பட்டது. 1809ம் ஆண்டு முதல் 1816ம் ஆண்டு வரை திருநெல்வேலி மிஷனெரிகளின் இருண்ட வருடங்கள் எனலாம். கொள்ளை நோய்களும் அதனைத் தொடர்ந்து பஞ்சங்களும் அதிகமாய் மக்களை வாட்டி வதைத்தது. இவைகளைத் தாண்டி உயிர் பிழைத்தவர்கள் இதனை காட்டிலும் மிக கொடுமையான தாக்குதலைத் தங்கள் சக மக்களால் அடைந்தனர். புதிதாக கிறிஸ்துவை ஏற்றுக்கொண்டு கிறிஸ்தவர்களானவர்களுக்கு எதிராக பிரமாணர்கள் எழும்பி, கிறிஸ்தவர்களை பெரிதும் ஒடுக்கினார்கள். கொள்ளை நோய் மற்றும் பஞ்சகாலங்களில் பலர் தங்கள் குடும்பங்களை இழந்தனர். அவ்வாறு பெற்றோரை இழந்தப் பிள்ளைகளுக்கென்று ஒரு பள்ளி ஆரம்பிக்கப்பட்டு அவர்களது வாழ்வு காக்கப்பட்டது

1841ம் ஆண்டு SPG சங்கத்தின் சார்பில் இடையன்குடியில் பணியாற்றின மிஷனெரி கனம் ராபர்ட் கால்டுவெல் ஐயரவர்கள் தன்னுடைய விடுமுறையை கழிப்பதற்காக லண்டன் மாநகரம் சென்றார்கள். ஒரு நாள் மாலையிலே அங்குள்ள தேவாலயம் ஒன்றில் பிரசங்கித்துக் கொண்டிருக்கும் போது இந்திய மண்ணில் ஆத்துமாக்களின் அறுவடைப் பற்றி சொல்லி, தங்களை மிஷனெரிகளாக அர்ப்பணிக்கும் ஆன்மாக்களுக்கு **அறைகூவல்** விடுத்தார்கள். கால்டுவெல் ஐயரவர்களின் அறைகூவலை, கர்த்தரின் அழைப்பாக எண்ணி தன்னை இந்திய தேசத்தின் ஊழியத்திற்காக அர்ப்பணித்தார், இறுதியாண்டு மருத்துவ மாணவரான மார்காஷியஸ் அவர்கள். மருத்துவ படிப்பை நிறைவு செய்துவிட்டு, ஊழியத்திற்கு செல்லலாம் என்ற அறிவுரையை தள்ளிவிட்டு உடனே அழைப்பிற்கு கீழ்ப்படிந்தார் மார்காஷியஸ் அவர்கள்.

இங்கிலாந்திலிருந்து புறப்பட்ட மார்காஷியஸ் அவர்கள் தன்னுடைய 23ம் வயதை எட்டிப்பிடிப்பதற்கு இரண்டு மாதங்கள் இருக்கும் தருணத்தில், 1875ம் வருடம் அக்டோபர் மாதம் 26ம் தேதி சென்னை துறைமுகத்திற்கு வந்திறங்கி இந்திய மண்ணில் முதல்

முறையாக காலடி வைத்தார். உதவி குருப்பட்டம் பெறுவதற்கான வயது இல்லாதபடியினால், பட்டம் பெறாத மிஷனெரியாக தன் ஊழியத்தினைத் தொடங்கினார். சில காலம் கனம் கால்டுவெல் ஐயரவர்கள் மற்றும் பிற மிஷனெரிகளிடம் பயிற்சி பெற்ற மார்காஷியஸ் அவர்கள் 1876ம் ஆண்டு நாசரேத்தின் மிஷனெரியாக பணியமர்த்தப்பட்டார்.

### தாது வருஷ பஞ்சம்

மார்காஷியஸ் அவர்கள் நாசரேத்தின் மிஷனெரியாக பொறுப்பேற்ற அடுத்த வருடத்திலேயே அதிகபடியான பாடுகளைச் சந்திக்க வேண்டியிருந்தது. 1877ம் ஆண்டு தமிழகம் மற்றும் அண்டை மாநிலங்கள் எங்கும் கொடிய பஞ்சம் உண்டாயிற்று. இப்பஞ்சத்திற்கு **தாது வருஷ பஞ்சம்** என்று பெயர். அது வரை மக்கள் கண்டிராத பெரும் மழை அக்காலத்தில் பெய்தது. பெரும்மழையின் காரனமாக ஆறுகள், குளங்கள் அனைத்தும் கரை உடைந்து பயிர்கள் எல்லாம் சேதமாயின. தமிழகம் முதல் ஒடிசா வரையிலாய் மழையினால் பெரும் சேதம் உண்டாயிற்று. மழையோடு கூட காலராவும் சேர்ந்து கொண்டபடியினால் மக்களின் மரணம் நாளுக்கு நாள் அதிகரித்தது. மரித்தவர்களை அடக்கம் செய்யக்கூடாத அளவிற்கு மரணங்கள் நிகழ்ந்த வண்ணம் இருந்தது. நோயினால் பாதிக்கப்பட்டவர்களுக்கு உதவி செய்வதற்கு மிஷன் மருத்துவமனைகளும், பசியினால் வாடுபவர்களுக்கு பசியாற்ற மிஷனெரிகளையும் தவிர பெரிதாக உதவிகள் ஒன்றும் மக்களுக்கு கிடைக்கப்பெறவில்லை. அரசு செய்த உதவிகளும் கூட மிஷனெரிகள் மூலமாகவே மக்களுக்குக் கொடுக்கப்பட்டது. ஏழை மக்களில் சுமார் நூற்றுக்கு இருபத்தைந்து பேர் மரித்துப்போனார்கள் எனலாம்.

### அனாதை விடுதி

பஞ்சத்திலும், வியாதியிலும் பெற்றோரை இழந்த குழந்தைகளின் எண்ணிக்கை அதிகமாயிருந்தது. 1877ம் ஆண்டின் இறுதியில் கனம் மார்காஷியிஸ் அவர்கள் அநாதைக் குழந்தைகளுக்கென விடுதி ஒன்றினை ஏற்படுத்தினார்கள். ஆரம்பக் காலத்தில் இவ்விடுதியானது அங்கிருந்த உயர்நிலைப்பள்ளி வளாகத்திலிருந்த தலைமையாசிரியர் வீட்டிற்கு அருகே இருந்த ஒரு மிகப்பெரிய ஆலமரத்தினடியில் அமைக்கப்பட்டது. ஆதரவற்ற பிள்ளைகளுக்கு விடுதி பஞ்ச காலத்தில் நடத்துவது எளிதான காரியமாக இருக்கவில்லை. ஒரு சில மாதங்கள் மிக சிரமத்திற்குள்ளாகவே சென்றது. உதவிகள் செய்வதற்கு ஆட்கள் இல்லாத நிலையில் தானே எல்லாக்காரியங்களையும் செய்து கொண்டிருந்தார்கள். மாணவர்களை விடுதியில் வைத்துப் பாதுகாப்பதும் அதிக சிரமாக போயிற்று. விடுதியில் இருக்க மனமில்லாமல் பலர் தப்பி செல்லுவதுண்டு. அவர்களை மறுபடியுமாக கொண்டு வந்து சேர்த்து, அவர்களை நல்வழிப்படுத்துவார்கள்.

இவ்வாறு விடுதி நடந்து கொண்டிருக்கும் போது 1878ம் ஆண்டு திடீரென அரசு பஞ்ச நிவாரண கேம்ப்பில் இருந்து (Goverment Famine Relief Camp) 80 ஆதரவற்ற குழந்தைகளை மார்காஷியஸ் ஐயவர்களிடம் ஒப்படைத்தார்கள். ஏற்கெனவே மிகுந்த நிதி நெருக்கடியில் இருந்த ஐயரவரகள், தன் நிலையை இங்கிலாந்திற்கு எழுதினார்கள். கடிதத்தின் பலனாக மான்ஷன் ஹௌஸ் பஞ்ச நிவாரணக் கமிட்டியார் (Mansion House Famine Relief Committee) ரூ. 750 அனுப்பினார்கள். அரசாங்கத்திற்கும் தன் விண்ணப்பத்தை ஐயரவர்கள் வைத்தார்கள். அரசோ எந்த உதவியும் செய்ய முடியாது என்று கூறிவிட்டனர். அந்நாட்களில் திருநெல்வேலி மாவட்ட ஆட்சியராக இருந்த J.B. பென்னிங்டன் துரை ஐயவரவர்கள் நடத்திய ஆதரவற்ற பிள்ளைகளின் விடுதியினை பார்த்து உதவி செய்வதற்கு முன் வந்தார்கள். நிரந்திரமான கட்டிடம் இவர்களுக்கு வேண்டுமென்று உணர்ந்த மார்காஷியஸ் ஐயரவர்கள் அதற்கான முயற்சியில் ஈடுபட்டார்கள். அதின் விளைவாக இரண்டு கட்டிடங்கள் கட்டப்பட்டு 1878ம் ஆண்டு மே மாதம் திருத்துவ திருநாளன்று பிரதிஷ்டை செய்யப்பட்டது.

### நாசரேத் கைத்தொழில் பாடசாலை - Art Industrial School

ஆதரவற்ற பிள்ளைகளும் கல்வி கற்க வேண்டுமென்கிற நோக்கத்தில் மார்காஷியஸ் ஐயவரவர்கள் தொழிற்கல்வி கற்றுக்கொடுக்க ஏற்பாடு செய்தார்கள். அதுவே நாசரேத் கைத்தொழில் பாடசாலையாக மாறினது. 1881ம் வருடம் (Art Industrial School - Nazareth என்ற பெயரில் இனிய துவக்கத்தைக் கண்டது. ஒவ்வொரு நாளும் காலை 8.30 மணி முதல் 12 மணி வரை தொழிற் கல்வி வகுப்புகள் நடைபெறும். தொழிற் கல்வியோடு கூட சேர்த்து வேதபாடம், தமிழ், கணக்கு முதலிய பாடங்களும் போதிக்கப்பட்டது. பெண் பிள்ளைகளுக்கு சிறப்பான வகுப்புகள் அவர்கள் திறமைக்கு ஏற்றார் போல் கற்று கொடுக்கப்பட்டது. சிலர் தையல் கற்றுகொண்டார்கள், நூல் நூற்றலும் கற்று கொடுக்கப்பட்டது. பெண்களில் சில பூத்தையல், பின்னல் தையல் போன்றவைகளைக் கற்று கொண்டு ஆலயத்திற்கு தேவையான துணிகளைத் தைத்துக் கொடுக்க ஆரம்பித்தார்கள். ஆண்களுக்கு நெசவு மற்றும் தச்சு வேலைகள் கற்று கொடுக்கப்பட்டது.

தொழிற் கல்வி கூடம் நாளுக்கு நாள் வளர்ச்சியின் பாதையில் கனம் மார்காஷியஸ் ஐயரவர்களால் கொண்டு செல்லப்பட்டது. 1884ம் ஆண்டு அப்பள்ளிக்கு தையல் இயந்திரம் ஒன்று வாங்கப்பட்டு தையல் பயிற்சி ஆரம்பிக்கப்பட்டது. 1887ம் ஆண்டுகளில் சித்திரம் வரைதல், சிற்ப வேலைகள் செய்தல், மர வேலைபாடுகள், தச்சுவேலை, கொல்வேலை, பிரம்புப் பின்னல், மாடல் டெய்லரிங், வர்ணம் தீட்டுதல், அச்சு வேலை, சுருக்கெழுத்து போன்றவைகள் கற்று கொடுக்கப்பட்டன. ஒவ்வொருவரும் குறைந்தது இரண்டு கைத்தொழிலாவது கற்று கொள்ள வேண்டுமென்பது ஐயரவர்களின் விருப்பமாக இருந்தது.

### பள்ளிக்கு கிடைத்த உதவிகள்

ஊர் அறிந்த பள்ளியை உலகறிய செய்ய வேண்டுமென்கிற ஆவல் கனம் மார்காஷியஸ் ஐயரவர்களின் மனதில் இருந்தது. "சென்னையில் இந்திய தேசிய கூட்டுக் கழகத்தார்" (National Indian Association) சார்பில் நடந்த கண்காட்சியில் கைத்தொழில் பாடசாலையிலிருந்து அனுப்பப்பட்ட பொருட்கள் பார்வைக்கும், விற்பனைக்கும் வைக்கப்பட்டிருந்தது. பெண் பிள்ளைகள் செய்த ரேந்தாத் தையலுக்கு (White Lace) ஒரு பரிசும், இரண்டு பாராட்டு சான்றிதழும் கிடைத்தது. இது பெரிய வெற்றி என்றே கூறலாம். அக்கண்காட்சியில் வைக்கப்பட்டிருந்த ஆடைகளுக்கும் சான்றிதழ் கிடைத்தது. ஐரோப்பிய பெண்கள் பலர் ரேந்தாவை மிகுந்த ஆர்வத்துடன் வாங்கிச் சென்றுள்ளனர். பல சாதி, மதத்தைச் சார்ந்தவர்களாக இருந்தாலும், எந்த ஒரு வித்தியாசமும்

இல்லாத படி நடத்தப்பட்டனர். கனம் மர்காஷியஸ் ஐயரவர்கள் பள்ளியை நடத்துவதற்கு ஒவ்வொரு மாதமும் மிகுந்த சிரமப்பட்டு வந்தார்கள். சென்னையை தலைமையிடமாகக் கொண்ட கல்வி இலாக்கா இயக்குநர் (Director of Public Instruction) கைத்தொழில் பாடசாலையை ஆய்வு செய்து மிகுந்த திருப்த்தியடைந்தார். மிக உன்னதமான சேவை என்று ஆய்வு குறிப்பில் எழுதினார். அதனைத் தொடர்ந்து ஆதரவற்றவர்களுக்குச் சிறந்த பணியாற்றி வருகிற இந்த ஸ்தாபனத்தை பாராட்டி, திருநெல்வேலி மாவட்ட நல் நிதிவாரியம் ஒவ்வொரு ஆண்டும் இப்பாடசாலைக்கு உதவித் தொகை வழங்கும்படி ஏற்பாடு செய்தனர். உதவிகள் பல கிடைத்தாலும் அது பாடசாலையின் தேவையினை சந்திக்க ஒரு சிறு தொகையாகவே இருந்தது.




கைத்தொழில் மற்றுமல்லாது ஆசிரியர் பயிற்சியும் தொடங்கப்பட்டது, அதில் பயிற்சி பெறும் மாணவர்களுக்கென்று தனியே மாதிரி பள்ளி ஒன்றும் ஆரம்பிக்கப்பட்டது. இக்கைத்தொழில் பாடசாலை நடைபெற்ற காலத்தில் இதற்கொத்த கல்வி நிறுவனம் திருநெல்வேலி மாவட்டம் எங்கும் காணப்படவில்லை. ஏன் தமிழகத்தில் இருந்த கைத்தொழில் பாடசாலைகளிலே நாசரேத்தில் கனம் மர்காஷியஸ் ஐயரவர்கள் ஆரம்பித்த இப்பாடசாலைக்கு ஒத்த ஒரு பெரிய பாடசாலையும் காணப்படவில்லை. இக்கைத்தொழில் பாடசாலை இன்றும் பல்லாயிரம் மாணவர்களின் வாழ்வாதாரமாகக் காணப்படுகின்றது.

நாசரேத் தைத்தொழில் பாடசாலையில் செய்யப்பட்ட மரப்பொருட்களுக்கு மிகுந்த மதிப்பு உண்டு. இன்றும் பல ஆலயங்களில் பயனபடுத்தப்படும் பிரசங்க பீடம், குருவானவர் இருக்கை, ஆல்ட்டர் மேஜை, வாசிப்பு பீடம், வாசல், ஜன்னல் போன்றவைகள் இக்கைத்தொழில் பாடசாலையில் உருவாக்கப்பட்டவைகளே. நாசரேத் தூய யோவான் பேராலயத்தில், பேராலயமாக உயர்த்தப்படுவதற்கு முன்பு வரை பேராயர் அமரக் கூடிய நாற்காலி இக்கைத்தொழில் பாடசாலையில் மாணவர்களால் செய்யப்பட்டது. இன்று இக்கைதொழில் பாடசாலையில் Advance Training Centre ஆரம்பிக்கப்பட்டு, விண்வெளிக்கு செல்லும் செயற்கைக்கோள்களுக்கு உதிரிபாகங்கள் செய்யும் அளவிற்கு இதன் தரம் உயர்த்தப்பட்டுள்ளது.

### முதியோர் கல்வி

சிறுபிள்ளைகள் மட்டுமல்ல கல்வி கற்காத பெரியவர்களும் கல்வி கற்று கொள்ள வேண்டுமென்ற ஆர்வத்தைக் கொண்டவர்களாக மிஷனெரிகள் இருந்தார்கள். ஆரம்பக்காலங்களில் முதியோர் கல்விக்கு வித்திட்டவர் கனம் மர்காஷியஸ் ஐயரவர்கள். மர்காஷியஸ் ஐயரவர்கள் நாசரேத்தில் ஊழியம் செய்த காலத்தில், நாசரேத் மக்கள் அதிகமாக பனையேறும் தொழிலை செய்து கொண்டிருந்தார்கள். ஆண்களின் வாழ்க்கை பனைமரத்தினை சார்ந்தே இருக்கும். காலையில் பனங்காட்டுக்கு செல்லும் அவர்கள் மாலையில் தான் வீடு திரும்புவார்கள். அத்தனை கடினமாக உழைப்பவர்கள். அவர்களுக்கு இரவிலே கல்வி கற்றுக் கொடுப்பது என்பது மிக கடினமான ஒன்றாக இருந்தது. எனவே முதியோர் கல்வியினை பெண்கள் மத்தியில் திருப்பினார். இதன் விளைவாக 1880ம் ஆண்டு **“பெண்கள் முதியவர் கல்விச் சாலை”** என்ற பெயரில் ஆரம்பித்தார். நாசரேத்தில் மட்டுமல்லாது, இதனை சுற்றியுள்ள கிராமங்களிலும் ஆரம்பிக்கப்பட்டது. மூக்குப்பீறி, எருசலேம், கடையனோடை, பன்றிமடல், குளத்துக்குடி போன்ற ஊர்களில் ஆரம்பிக்கப்பட்டன.

பெண்கள் முதியவர் கல்விச் சாலையில் கற்றுக் கொடுப்பதற்காக அக்காலங்களில் சபை ஊழியராக இருந்தவர்களின் மனைவிமார் உதவி செய்தனர். அது மட்டுமல்லாது நாசரேத் பெண்கள் பள்ளியில் பயின்று முடித்த சில பெண்களும் உதவி செய்வதற்கு முன்வந்தார்கள். சம்பளம் மிக குறைவாக இருந்தாலும் கூட ஊழியமாக செய்ய முன்வந்தனர். ஒரு கட்டத்தில் பற்பலவிதமான சூழ்நிலை காரணமாக பெண்கள் வருவது வெகுவாக குறைந்துவிட்டது. எனவே ஐயரவர்கள் ஒவ்வொரு ஆசிரியரும், தங்கள் கைகளுக்குள்ளாகக் கற்றுகொள்ளும் மாணவிகளுக்கு தாங்களே பொறுப்பு என்று கூறி அவர்களைச் சந்தித்துப் பள்ளிக்கூடம் வருவதற்கு ஒழுங்கு செய்தார்கள்.

பெண்கள் முதியவர் கல்வி சாலைக்கு வர அவர்களை உற்சாகப்படுத்தும் வகையாக அவர்களுக்கு பாட புத்தகங்கள் மற்றும் அவர்களுக்கு தேவையானவைகளை இலவசமாகக் கொடுத்தார். அது மட்டுமல்லாது முதியவர் கல்வி கற்க வரும் திருமணமாகாத பெண்களுக்கு திருமணத்தின் போது, சேலை ஒன்று மிஷனிலிருந்து இலவசமாக கொடுத்து அவர்களை உற்சாகப்படுத்தினார். எனவே அநேக பெண்கள் இப்பள்ளியில் சேர்ந்து கல்வி கற்றுக்கொள்ள ஆரம்பித்தார்கள்.

### சிந்தனைக்கு

இறைப்பணியை செய்யும் படியாக அனுப்பப்பட்ட மிஷனெரிகள், தங்கள் பணித்தளம் வந்தடைந்ததும், சூழலை அறிந்து மக்களின் உயர்விற்காக அரும்பாடுபட்டு உழைத்திருக்கின்றார்கள். தங்கள் தரிசனங்களை ஜெபத்துடனும், மிகுந்த பிரயாசத்துடனும் நிஜப்படுத்தியிருக்கிறார்கள். நூற்றுக்கணக்கான கல்விச்சாலைகளை இன்றும் நம் தலைமுறையினர் பயன்பெறுமாறு விட்டுச்சென்றிருக்கிறார்கள். அவற்றை பாதுகாப்பதும், பராமரிப்பதும் இன்னும் பல நிறுவனங்களை உருவாக்குவதும் நம் தலைமுறையினரின் கடமையாகும். கல்வி கானல் நீராய் இருந்த காலத்திலும், நாதியற்ற நிலையில் இருந்த பிள்ளைகளுக்குச் சிறந்த கல்வியைக் கொடுத்து அவர்கள் வாழ்வை ஆசீர்வாதமாய் மாற்றின மிஷனெரிகளின் வாழ்வு நமக்கு ஒரு சிறந்த பாடமே.

**அருள்திரு .H. ஜான் சாமுவேல், பண்டார செட்டிவிளை**



# மிஷனரிகளின் கல்விப் பணி

அநேக மாதங்களுக்குப் பிறகு மிகச் சிறப்பானக் கட்டுரையின் வாயிலாக உங்களை சந்திப்பதில் பெருமகிழ்ச்சி. கல்வி ஒரு மனிதனை செதுக்கி முழு மனிதனாக அவனை மாற்றுகிறது, அது அவனை மட்டுமின்றி அவனை சுற்றியுள்ள அவனின் சூழ்நிலைகளை மாற்றும் பேராற்றல் அதற்கு உண்டு. குறிப்பாக தீண்டாமை, சாதி, சதி, பெண்களுக்கான இழிவுகளுக்கு முற்றுப் புள்ளி வைக்கக் கல்விப் பெரும் பங்கு வகித்தது.

கல்வி என்பது என்னவென்றே தெரியாமல் ஒரு சமூகத்தினருக்கு மாத்திரமே அதை பயனடையும் படியாக வைத்த காலத்தில், மனிதனை மனிதன், சாதி, இனம் போன்ற வேறுபாடுகளால் ஒதுக்கி வைத்ததை பார்த்த மிஷனரிகள் இவற்றை தகர்த்தெறியும் சக்திக் கல்விக்கு மட்டும் தான் உண்டென்பதை நன்கு புரிந்து வைத்திருந்தனர்.

தாழ்ந்த சமூகத்தினருக்கு மிஷனரிகள் வாயிலாக பல உதவிகள் பெற்றாலும் மறுபடியும் தங்களின் தினத்தேவைக்கு உயர் குல வீட்டின் வாசலருகே சென்று கைகட்டி தங்களையும் தங்கள் குழந்தைகளையும் அவர்களுக்கு விற்று விட்டு அடிமைகளாக அவர்களின் வீட்டில் வாசலருகே காத்துக்கொண்டிருந்து இருக்கும் நிலைமைகளை மாற்ற மிஷனரிகள் பெரும் பாடுபட்டனர்.

**வரலாற்றுப் பின்னணி:**

இந்தியாவில் போர்த்துக்கீசியர்களால் (ஏசுநாதர் சபை) முதன் முதலில் கோவாவில் **'சாண்டா ஃபே'** பள்ளி 1540ஆம் ஆண்டு நிறுவப்பட்டது, பிறகு 1542இல் இப்பள்ளியில் புனித பிரான்சிஸ் சேவியர் பொறுப்பேற்ற பிறகு 1548 இல் கல்லூரியாக உயர்த்தப்பட்டு தூய பவுல் கல்லூரி என மறுபெயரிடப்பட்டது. அதன் பிறகு அதிக மிஷனரி பள்ளிகள் இந்தியாவின் பிற பகுதிகளில் தோன்றியது பசீனில் (1546), கொச்சினில் (1549), புன்னைக்காயில் (தமிழ்நாடு) (1567), மதுரையில் (1595), புதுச்சேரியில் (1713), தமிழ்நாட்டில் (உயர்நிலைப் பள்ளி) எல்லக்குறிச்சி (1731) மற்றும் கேரளாவில் மன்னனத்தில் ஒரு சமஸ்கிருத பள்ளி (1846) என அங்குமிங்குமாக பள்ளிகள் தோற்றுவிக்கப்பட்டது. இருப்பினும் ஆங்கிலேயர் ஆட்சிக் காலத்தில் தான் கல்வி இந்தியாவில் ஒழுங்கமைக்கபட்டு அநேக பகுதிகளில் பள்ளிகள் துவங்கப்பட்டது. சுதந்திரம், சமத்துவம் மற்றும் சகோதரத்துவம் பற்றிய மேற்கத்திய கருத்துக்கள் **'இளந்தலைமுறையினரை'** ஈர்க்கக் தொடங்கியது.

1813 - 1833 காலத்தை, தொடக்கப் பள்ளிகளின் (எலிமெண்டரி) காலம் என்று அழைக்கலாம், இப்பள்ளிகளில் வட்டார மொழிகளுக்கு முக்கியத்துவம் அளிக்கப்பட்டு அவற்றின் வாயிலாக கல்வி போதிக்கப்பட்டது. 1833 - 1857 காலகட்டத்தில் இடைநிலைப் பள்ளிகள் (செகண்டரி) மற்றும் கல்லூரிகளுக்கு முக்கியத்துவம் வழங்கப்பட்டு ஆங்கில மொழி அதிகமாகப் பயிற்றுவிக்கபட்டது.

ஆங்கிலக் கிழக்கிந்தியக் கம்பெனி இந்திய மக்களின் கல்விக்கான நேரடிப் பொறுப்பை ஏற்க விரும்பாத போது, கிறிஸ்தவர் மிஷனரிகள் பள்ளிகள் மற்றும் கல்லூரிகளை நிறுவுவதற்கு முன் வந்தனர். கிழக்கிந்தியக் கம்பெனிக் கொள்கை என்னவென்றால், **'முதலாவது ஒளி, மலையுச்சியை தொட வேண்டும் அதன் பிறகு சமவெளிகளுக்கும் ஆழங்களுக்கு பரவட்டும்'** (ஹண்டர் கல்வி

ஆணைய அறிக்கை, 1882). அதற்கு அர்த்தம் என்னவெனில் பணக்கார பிராமணர்களுக்கு முதலாவது கல்வி கொடுக்கப்பட வேண்டும், அவர்களிடமிருந்து அது சாதாரண மக்களுக்கு சென்றடைய வேண்டும் என்ற எண்ணம் இருந்தது, ஆனால் அது சரிவர நிறைவேறவில்லை.

அரசாங்கம் கல்விப் பணிகளில் ஆர்வம் இல்லாமல் பின்னடைத்த சமயத்தில் மிஷனரிகள் கல்வியில் மிகுந்த ஆர்வம் காட்டினார். மதுரா மிஷன் (யேசுநாதர் சபை), தரங்கம்பாடி மிஷன் (எஸ் பி சி கே ) & (எஸ் பி ஜி ), டேனிஷ் மிஷன், சி எம் எஸ் மிஷன், வெஸ்லியன் மிஷன், லண்டன் மிஷன், பிரீ சர்ச் மிஷன், ஸ்காட்லாந்து மிஷன் என பல்வேறு மிஷனரி நிறுவனங்கள் கல்வியின் பயனை அறிந்து சமுதாயத்திற்குக் தொண்டாற்றினார்.

**மிஷனரிமார்களின் தியாகங்களும் நோக்கமும்:**

ஆரம்ப நாட்களில், மிஷனரிகள் கல்வியை சாதாரண மக்களுக்கு புரியவைக்கச் பெரும் பாடுபட்டனர், உதாரணமாக திருவள்ளூர் பகுதியில் 1884ஆம் ஆண்டு வாக்கில் வில்லியம் கௌடி மிஷனரி சாதாரண மக்கள் படும் வேதனைகளை, உயர்குல மக்களிடையே அடிமைகளாய் தங்களையே விற்று விட்ட மக்களிடம் சென்று உங்களிடம் உள்ள பிள்ளைகளில் ஒரு குழந்தையாவது எங்களுக்கு தாருங்கள் நாங்கள் அவர்களுக்கு படிப்பு, தொழில் போன்றவற்றை தந்து அவர்களை உயர்த்துவோம் என்று கெஞ்சினார்.

கௌடி அவர்களின் அன்பு அம்மக்களை நெகிழ செய்த போதினும் அவர்களின் குழந்தைகளை பள்ளிக்கு அனுப்பினால் ஊரை விட்டு ஒதுக்குவது, பணி கொடுக்காமல் அவர்களின் வாழ்வாதாரத்தைக் கெடுப்பது என பல்வேறு இன்னல்களை உயர்குல மக்கள் கொடுத்தனர்.

சாதராண மக்களின் வாழ்வாதாரத்தை உயர்த்த எண்ணிய இப்பெரும் மிஷனரிமார்களை அதை விரும்பாத உயர் குல மக்கள், மறைந்திருந்து கற்களை கொண்டு தாக்குவது, சாணி மற்றும் சாக்கடை தண்ணீரை கொண்டு அவர்கள் மேல் ஊற்றுவது, இரவில் மிஷனரிகள் தங்கும் வீடுகள் மீது கூழாங்கற்களை எறிதல் போன்ற பல்வேறு இன்னல்களை கொடுத்தனர். இப்பேர்ப்பட்ட துன்பங்கள் எல்லாவற்றையும் சகித்து நம்மக்களை உயர்த்த எண்ணிய மாபெரும் இதயங்களை நினைப்பதில் மட்டற்ற மகிழ்ச்சி.

இப்பள்ளிகளில் கல்வி, ஒழுக்கம், நற்பண்புகள், அறிவியல், மொழி, ஆங்கிலம், மேலாண்மை போன்ற பல்வேறு பாடத்திட்டங்கள் பயிற்றுவிக்கப்பட்டது.

**பெண்களுக்கான கல்வி :**

18ஆம் நூற்றாண்டின் இறுதியில் கிறிஸ்தவ மிஷனரிகளின் செயல்பாடுகளில் மிக முக்கியமான பணியாக பெண்களின் மத்தியில் கல்வி, சுகாதாரம் மற்றும் அவர்களின் வாழ்வாதாரத்தை உயர்த்தும் பணிகளில் மிஷனரிகள் முனைப்புடன் செயல்பட்டனர். இந்தியாவில் மிஷனரிகளால் மட்டுமே கல்வியை பெண்களுக்கு கொண்டு சேர்க்கப்பட்டது. இந்தியாவில் முதல் பெண் பள்ளி 1819 இல் கோட்டயத்தில் மிஷனரிகளால் திறக்கப்பட்டது. சி.எம்.எஸ் மிஷனரிகளான மேரி அன்னே குக் மற்றும் திருமதி வில்சன் 1820 இல் கல்கத்தாவில் பெண் கல்வியைத் தொடங்கினர். பெண்களுக்கான கல்வி, சுகாதாரம், ஒழுக்க நெறிகளை மத, சாதி பாகுபாடின்றி அனைவருக்கும் கற்றுத் தந்தனர், இவையே இந்திய பெண்களின் கல்விக்கும், அறிவொளிக்கு வழி வகுத்தது.. பின்னாளில் மருத்துவம், கலை, அறிவியல் துறைகளில் பெண்களுக்கான கல்லூரிகளும் துவங்கப்பட்டு சமுதாயத்தில் மாபெரும் மாற்றங்களைக் கொண்டு வந்ததை யாராலும் மறுக்க முடியாது.

இப்பேர்ப்பட்ட கல்வி தொண்டாற்றிய மிஷனரிமார்கள் கட்டிய பல பள்ளி, கல்லூரிகளுக்கு அப்போதிருந்த அமைப்பும், வலிமையையுமின்றி சிதைந்து உள்ளது, நம்மால் இயன்ற உதவிகளை செய்வோம், மிஷனரிமார்களின் தியாகங்களை நினைப்போம் !!

**வெ. தானியேல் மோகன்ராஜ் சென்னை**





# விடியல் எப்போது ?

முன்னாள் பாரத பிரதமர் டாக்டர் மன்மோகன் சிங் அவர்கள் கிறிஸ்தவர்களைப் பற்றிக் கூறும்போது, **‘கிறிஸ்தவ சமுதாயம் இந்தியாவில் சிறுபான்மையாக இருந்தாலும், தேசத்தில் கல்வி, மருத்துவம் மற்றும் சமுதாய முன்னேற்றத்தில் கிறிஸ்தவர்களின் பங்கு அளப்பெரியதாகும்,’** என்று கூறியுள்ளார். கிறிஸ்தவ மிஷனரிகளைப் பற்றித் தான் அவர் கூறுகிறார் என்பது தெளிவு! கவிஞர் வைரமுத்து பேசிய ஒரு சிறு வீடியோவை நான் பார்த்தேன். அதில், **‘கிறிஸ்தவர்கள் (மிஷனரிகள்) மட்டும் தமிழ்நாட்டுக்கு வந்திருக்காவிட்டால், கல்வி என்பது பொதுவுடைமை ஆகியிருக்காது. அந்தக் கிறிஸ்தவ சமுதாயத்தை இந்த இடத்தில் இருந்து கொண்டு நான் வணங்குகிறேன். அவர்கள் தான் ஒடுக்கப்பட்டவர்களும் கல்விக் கற்க வகை செய்தார்கள்,’** என்று கூறினார். மிஷனரிகளின் கல்விப் பணியைப் பற்றி ஒரே வரியில் அவர் கூறி முடித்து விட்டார் என்று எண்ணுகிறேன். பல இன இந்தியர்களாகிய நம்மை கல்வியறிவில் முன்னேற்ற மிஷனரிகள் பட்ட பாடு கொஞ்ச நஞ்சமல்ல. நாம் எத்தனை நன்றியுணர்வோடு இருக்கவேண்டும் தெரியுமா?

கல்வியை அனைவருக்கும் பொதுவுடைமைப் படுத்த அவர்கள் பாடுபட்டதுமல்லாமல், பெண்களைக் கல்விக் கற்க வைக்க அவர்கள் அதிகம் பாடுபட வேண்டியிருந்தது. ஏனெனில், **‘அடுப்பூதும் பெண்களுக்கு படிப்பெதற்கு?’** என்பதே அக்கால கேள்வி! ஒரு சம்பவத்தை சொல்கிறேன் கேளுங்கள்! வில்லியம் கேரி குழு கல்கத்தாவை சுற்றி பல பள்ளிகளை ஏற்படுத்தி பெண்கள் கல்வி கற்க முயற்சி செய்து கொண்டிருந்த பொழுது, இந்து சமயத்தை சேர்ந்த ஒருவர் அவர்களிடம் கீழ்க்கண்டவாறு கூறினாராம், ‘நீங்கள் என் மகன்ளுக்குக் கல்வி கொடுங்கள். எல்லா ஞானத்தையும் கற்றுக்கொடுங்கள். ஆனால், என் மகள்களுக்கு மட்டும் நீங்கள் கல்வி கொடுக்கவே கூடாது. அவர்களது அறியாமை என் குடும்ப கௌரவத்தைக் காப்பாற்ற மிகவும் அவசியமாயிருக்கிறது. என் மகள்களுக்கு எந்த வயதில் கல்வி கொடுக்க வேண்டும் என்று நீங்கள் எண்ணுகிறீர்களோ, அதற்கு முன்னமே அவர்கள் திருமணம் செய்து கொடுக்கப்பட வேண்டும்.’ அந்த காலத்தில் இருந்த எண்ண ஓட்டத்தைப் பாருங்கள்! இன்றைக்கு சுதந்திரமாய் கல்வி கற்கும் பெண் பிள்ளைகளே! கற்று நல்ல வேலையில் இருக்கும் பெண்களே! நீங்கள் மிஷனரிகளின் கல்விப்பணியை எவ்வளவு நன்றியோடு நினைவு கூறவேண்டும் தெரியுமா?

**‘வேத அறிவோடு கூட அனைவருக்கும் கல்வி கொடுப்பதால் மட்டுமே இந்தியாவின் அறியாமை இருளை அகற்ற முடியும்’** என்ற நோக்கத்தோடு செயல்பட்ட அவர்கள் 17, 18, மற்றும் 19ஆம் நூற்றாண்டின் முற்பகுதியில் பல பள்ளிகளையும், கல்லூரிகளையும் ஏற்படுத்தினர்.

சில மிஷனரிகளை இன்றும் நாம் நினைவில் வைத்து கொண்டாடுகிறோம். பல மிஷனரிகள், அதிலும் குறிப்பாக பெண் மிஷனரிகள் வெளி உலகிற்குத் தெரியப்படாமலேயே தங்கள் ஊழியத்தை உண்மையும், உத்தமமுமாக நிறைவேற்றி பரலோக வாசிகளாகி விட்டனர். கல்கத்தாவில் Scottish Church College நிறுவிய அலெக்ஸாண்டர் டப் (Alexander Duff), அவரது பிரசங்கத்தால் தேவ ஊழியத்திற்கு ஒப்புக்கொடுத்து பின்நாட்களில் Madras Christian College உருவாகக் காரணமாயிருந்த ஜான் அன்டர்ஸன், நம் பகுதியில் சுவிசேஷ ஊழியத்தோடு கல்விப்பணியையும் செய்து பதினெட்டே ஆண்டுகளில் 108 பள்ளிகளை நிறுவிய கதாநாயகன் ரேனியஸ், ராபர்ட் கால்ட்வெல், ஜி.யு.போப், வேலூர் கிறிஸ்தவ கல்லூரி உருவாகக் காரணமாயிருந்த ஐடா ஸ்கடர், ஜான் டக்கர் மற்றும் சாரா டக்கரின் கல்விப்பணி, கல்கத்தாவில் சீரியப்பணி

செய்த வில்லியம் கேரி, மார்ஷ்மன் மற்றும் குழு என்று இப்பெரிய பணியில் தங்களையே ஊற்றிக் கொடுத்த மிஷனரிகள் ஏராளம். மிஷனரிகளின் தரிசனம் மற்றும் செயல்முறை (Vision and Mission) விரிவானது.

**நிற்க.**

மிஷனரிகள் உருவாக்கி இப்போது திருமண்டலத்தின் கட்டுப்பாட்டில் இருக்கும் பள்ளிகளும், கல்லூரிகளும் ஆதி தரிசனத்தோடு செயல்படுகின்றனவா? சற்று சிந்தித்துப் பார்ப்போம். இதைப்பற்றி நான் இன்னும் ஆழமாய் பேசப்போவதில்லை. ஆனால், ஒரு காரியத்தை நன்றாய் யோசித்துப் பாருங்கள். தேவன் மிஷனரிகளை நம் பகுதிக்குக் கொண்டு வந்ததால், நாம் அறியாமை இருள் நீங்கி கல்வியறிவில் முன்னேறியுள்ளோம். இதை அனுபவித்த நாம் இந்தியாவில் இன்னும் அறியாமை இருளில் இருக்கும் பகுதிகளில் அறியாமை இருள் நீங்க என்ன செய்து கொண்டிருக்கிறோம்? இன்றைக்கு வட இந்தியாவில் இருக்கும் பல மிஷன் பள்ளி, கல்லூரிகளில் வேலை செய்ய தகுதியுள்ள ஆசிரியர்கள் இல்லையே!

**கல்வி கற்றவர்கள் கல்வி கல்லாதோர்க்குக்**
**கடன்பட்டவர் கண் திறக்கவே;**
**பல்வழி அலையும் பாதை தப்பினோரைப்**
**பரிந்து திருப்ப நிதம் பார்த்திடுவீர்!**

இன்னும் சற்று ஆழமாய் பேசுகிறேன். **'வட இந்தியாவில் அரசாங்கப் பள்ளிகள் தான் இருக்கின்றனவே! பின்னே ஏன் மிஷன் பள்ளிகள் செயல்படவேண்டும்?'** என்று எண்ணுகிறீர்களோ! நான் நேரில் பார்த்த அளவில் அரசாங்கப் பள்ளி ஆசிரியர்களால் அறியாமை இருளை நீக்க முடியவில்லை. இந்த 21ஆம் நூற்றாண்டிலும் கூட, பல வட இந்தியக் கிராமங்கள் பூசாரிகளின் பிடியிலேயே இருக்கின்றன என்பது தான் உண்மை. இதை நான் நேரில் பார்த்துக்கொண்டிருக்கிறேன். தீண்டாமையோ ஒழிந்தபாடில்லை. அங்குள்ள ஆசிரியர்களும் இதை ஆதரித்து, மாணவர்களையும் அதற்கு கட்டுப்பட்டிருக்கச் சொல்கின்றனர். **'தனி மனித சுதந்திரமும், சமத்துவமும், சகோதரத்துவமும் காக்கப்பட வேண்டும்'** என்று அவர்களால் மாணவர்களுக்கு கற்றுக் கொடுக்க முடியவில்லையே! விளைவு! சமுதாயக் கட்டுகளும், மூடப்பழக்கங்களும், தீண்டாமையும் இந்த நவ நாகரீக யுகத்திலும் தொடர்கின்றன! மிஷனரிகள் மட்டும் நம் பகுதிகளுக்கு வந்திருக்காவிட்டால், இன்றைக்கு நம் ஊரிலும் இதே நிலைமை இருந்திருக்கலாம் என்பதை நினைவில் கொள்ளுங்கள்!

**'வேத அறிவோடு கூட அனைவருக்கும் கல்வி கொடுப்பதால் மட்டுமே இந்தியாவின் அறியாமை இருளை அகற்ற முடியும்'** என்பதே நமது மிஷனரிகள் கற்றுத் தந்த உண்மை. கல்வி பொதுவுடைமைப் படுத்தப்பட்டதால் பயன் பெற்றோரும், மிஷனரிகள் போராடி பெற்றுத் தந்த பெண் கல்வி உரிமையால் பயன் பெற்றோரும் சிந்திப்போம்! வட இந்தியாவின் நிலையை புரிந்து கொள்வோம். வேதாகம அடிப்படையில் எனக்கு மறு பிறவி எடுப்பதில் துளியும் நம்பிக்கை இல்லை! என்றாலும் கூட, கேரி, ஆன்டர்சன், டப், ரேனியஸ் போன்றோர் மீண்டும் பிறந்து நம்மை வழிநடத்தினால் எத்தனை நலமாயிருக்கும் என்று எண்ணத் தோன்றுகிறது!

ஆதி தரிசனத்தோடு மிஷன் பள்ளிகள் செயல்படவேண்டும்! அறியாமை இருளை அகற்றும் புதிய கல்விச்சாலைகள் தேசமெங்கும் திறக்கப்படவேண்டும்! தியாகமாய் ஊழியம் செய்யும் மிஷனரி ஆசிரியர்கள் நம்மிடையே எழும்ப வேண்டும்! நம் தேசம் விடியலைக் காணவேண்டும்!

நீங்கள் எதாவது ஒரு வகையில் இந்த மாபெரும் பணியில் உங்களை இணைத்துக்கொள்ளுங்கள்!

> **'ஜெபிக்கிறேன் பிரதர்னு'** மட்டும் சொல்லிடாதீங்க ப்ளீஸ்

பாரம்பரிய திருச்சபையோரே! நீங்கள் ஆராதனையில் பாடும் பாடல்களுக்கு செயல்வடிவம் கொடுங்களேன்! (இதற்காக வெறுமனே **'ஜெபிக்கிறேன் பிரதர்னு'** மட்டும் சொல்லிடாதீங்க ப்ளீஸ்)

**இந்து தேச மாது சிரோமணிகள்**
**விந்தை ஒளிக்குள் வரவழைப்போம்!**
**சுந்தர குணங்களடைந்து,**
**அறிவிலுயர்ந்து, நிர்ப்பந்தங்கள் தீர்ந்து, சிறந்திலங்கிட**

**- மோஜோ தேவதாசன்**

# சுமைதாங்கியாய் விதையாய்

## சி.எஸ்.ஐ நார்த்விக் மேல்நிலைப் பள்ளி, சென்னை

நான் முதல் முதலில் சுமைதாங்கி கல்லை நேரில் கண்டது 2021 ஆம் ஆண்டு தான். அதை எனக்கும், வரலாற்று எழுத்தாளரான நிவேதித்தா லூயிஸ் அவர்களுக்கும், மிக ஆவலோடு அழைத்துச் சென்று காண்பித்தது போதகர் ஜான் சாமுவேல் அவர்கள். இவர் உடங்குடி ஊரின் அருகில் உள்ள பண்டாரஞ்செட்டி விளை சி.எஸ்.ஐ தூய லூக்கா ஆலயத்து சபை போதகர். ஊரின் எல்லை அருகில் பல ஆண்டுகள் உபயோகத்தில் உள்ள சாலை வழியின் ஓரத்தில் புதர்களுக்கு இடையே அமைதியாக நின்றுக்கொண்டிருந்தது. இன்று தமிழ்நாட்டில் எல்லா இடங்களிலும் சாலைகள் விசித்திரமாக உயரமாகவே – சுமைதாங்கி கல்லின் கனிசமான பகுதி மண்ணிற்கு அடியில் புதைந்து விட்டது. எனினும் சுமைதாங்கியை ரசித்துப் பார்த்தோம்.








பொது வாகனங்களும் தார் சாலைகளும் இல்லாத காலங்களில, நடந்தே செல்லும் மக்களும் வணிகர்களும் பாரமான பொருட்களை தலையின் மேல் வைத்து செல்வார்கள். கனமான சுமைகளை யார் உதவியும் இன்றி சுமைதாங்கி கல்லின் மேல் வைத்து இளைப்பாறி பின்னர் உதவியின்றி தானே மீண்டும் சுமையைக் தலை மேல் எளிதாக வைத்துக்கொள்ள இந்த கல் பெரிதும் உதவும். குழந்தைகளுக்குக் கொஞ்ச நேரம் தொட்டில் கட்டிவிடவும் வசதியான அமைப்பு. சுமைதாங்கியின் பக்கத்தில் நிழல் தரும் மரத்தையும் நட்டனர். சுமைதாங்கி கற்கள் அதிகமாக தேவைப்பட்ட முற்காலங்களில் தமிழ்நாட்டில் இந்தக் கற்களை ஆங்காங்கே பதிக்க காரணங்களையும் மக்கள் உண்டாக்கிக் கொண்டனர். குழந்தையை வயிற்றில் சுமக்கும் போதே ஒரு பெண் காலாமானால் அத்தாயின் நினைவாக சுமைதாங்கி கற்கள் நடப்பட்டன. செல்வந்தர்களும், கொடையாளிகளும், நாடாண்டவர்களும் இவ்வாறு கற்களைப் பதித்து வைத்தனர். சகமனிதர்களுக்கு உதவி செய்வது எப்போதுமே ஊக்குவிக்கப்படுகிறது.

இந்த சுமைத்தாங்கியை சற்றும் எதிர்ப்பார்க்காத மற்றுமோர் இடத்தில் நான் கண்டதுண்டு. சென்னையில் உள்ள ராயபுரம் பகுதியில் மிஷினெரிகளால் தொடங்கப்பட்ட பெண்களுக்கான பள்ளி நார்த்விக் பள்ளியாகும். அந்த பள்ளியின் சின்னம் சுமைதாங்கி !!! அக்காலத்து பாணியில் வட்டத்தின் நடுவே ஓவியமாக பதிந்து அதைச் சுற்றி **"not to be served but to serve"** என்ற வாசகம் பொறிக்கப்பட்டுள்ளது. இதன் தமிழாக்கம் – சேவை பெறுவதற்கு அல்ல சேவை செய்வதற்கே – என்பதாகும். வேதாகமத்தில் இயேசுவானவர் இவ்வார்த்தைகளைக் கூறுவதைக் காணலாம். உலகத்தில் தன்னுடைய வேலை பிறர்க்கு சேவை செய்வதே என்றும் அவரை பின்பற்றும் எல்லோரும் அவ்வாறே சேவை செய்ய அழைக்கப்படுகின்றனர். கல்வி எல்லாருக்கும் கிடைக்கப் பெறாத காலக்கட்டத்தில் அதுவும் பெண்களுக்கென்று ஆங்கிலேயர்களால் ஆரம்பிக்கப்பட்ட பள்ளியின் கொள்கை இந்த மண் சார்ந்த அழகிய சின்னத்தைத் தாங்கி 200 ஆண்டுகளை நோக்கி பயணித்துக்கொண்டிருக்கிறது. இங்கு கல்வி கற்ற பெண்களின் சுமைகளை தாங்கியும், கல்வி கற்பித்தும் இவர்களை உலகத்திற்கு உப்பாகவும் வெளிச்சமாகவும் இருக்க இந்தக் கல்விப் பணி உதவியது.

### நார்த்விக் பள்ளி உருவான விளக்கம்:-

நிவேதித்தா லூயிஸ் எழுதிய 'வடசென்னை' புத்தகத்திலிருந்து சில பாகங்கள் (2020) (கிழக்கு பதிப்பகம்) நார்த்விக் பள்ளியைத் தொடங்கியவர் மார்கரெட் லோஷர் ஆண்டர்சன் என்ற பெண்மணி! சுவிட்சர்லாந்து நாட்டில் இருந்து மிஷனரி பணியாற்ற மதராஸ் நகருக்கு 1845ஆம் ஆண்டு வந்து சேர்ந்தார் அன்றைய ஸ்காட்டிஷ் மிஷனரிகள் ராயபுரம் பகுதியில் உலக மீட்பர் ஆலயத்தை அப்போது தான் கட்டி முடித்திருந்தார்கள்....

மதராஸ் கிறிஸ்துவக் கல்லூரியை தொடங்கிய ஜான் ஆண்டர்சன் என்ற மிஷனரி அக்காலத்தில் கருப்பர் நகரம் பகுதியில் கல்லூரி, தேவாலயம் அமைத்து கல்விப்பணி செய்து வந்தார். பெரும்பாலும் சாதி இந்துக்கள் எதிர்ப்பால் கல்வி பெற முடியாத ஒடுக்கப்பட்ட மாணவர்கள் தான் ஆண்டர்சனிடம் பயின்றார்கள். மூன்று மாணவர்கள் 1846ஆம் ஆண்டு இந்து மதத்தில் இருந்து மாறி கிறிஸ்தவத்தை தழுவினார்கள். ஜனவரி 29, 1847 அன்று மார்கரெட் லோஷரை ஆண்டர்சன் திருமணம் செய்து கொண்டார்.

புதிதாக திருமணம் செய்து கொண்ட தம்பதி பள்ளி வளாகத்திலேயே அங்கிருந்த மாணவர்களுடன் தங்கினார்கள். மார்கரெட் வந்ததும் - ராயபுரம் பகுதியைச் சேர்ந்த இந்து உயர் சாதி மாணவிகள் ஐந்து பேர் மார்கரெட்டிடம் கல்வி கற்க தஞ்சம் புகுந்தார்கள். அதே ஆண்டு அக்டோபர் 20 அன்று ராயபுரம் பகுதியில் நார்த்விக் பள்ளியை தொடங்கினார் மார்கரெட். அங்கு

பயின்ற ஐந்து மாணவிகளும் கிறிஸ்தவத்தை தழுவினார்கள். மளமளவென்று ஆண்டர்சன் நடத்திய பிற பள்ளிகளில் இருந்தும் எங்கே மதம் மாறிவிடுவார்களோ என்ற அச்சத்தில் மாணவிகளை பெற்றோர் படிப்பை நிறுத்தி அழைத்துச் சென்றார்கள். ஆனால் இன்னும் மூன்று பெண்கள் மார்கரெட்டிடம் தஞ்சம் அடைந்தார்கள். எட்டு சிறுமிகள், ஆண்டர்சன் தம்பதிகள், பிரயிட்வுட் தம்பதிகள் என்று இட நெருக்கடி மிகுந்தது. நகரின் ஒதுக்குப்புற பகுதியான ராயபுரத்தில் வாடகைக்கு இடம் பிடித்துப் பெண்களும், ஆண்டர்சன் தம்பதியும் இடம் பெயர்ந்தார்கள்.

மதராஸ் மாகாணத்தில் காஞ்சி, அரக்கோணம், செங்கல்பட்டு என்று பள்ளிகள் தொடங்கி நடத்தினார்கள். ஆண்டர்சன் உடல் நிலை மோசமானது. மார்ச் 25, 1855 அன்று



ஆண்டர்சன் மரணமடைந்தார். திருமணம் முடித்து 9 ஆண்டுகளில் கணவரை மார்கரெட் இழந்துவிட்டார். ஆனால் இந்தியாவை விட்டு, சென்னையை விட்டு அகலவில்லை. தன் பணியைத் தொடர்ந்தார்! மதராஸ் கிறிஸ்துவ கல்லூரி மற்றும் நார்த்விக் பள்ளியில் அவர் பணி இன்றியமையாத பணியானது. (இன்றும் ஆண்டர்சன் என்ற பெயரால் சென்னையில் தெரு பிராட்வேயில் உள்ளது) 15 ஆண்டுகளாக பிராட்வே பகுதியில் பெண்கள் பள்ளி இயங்கியது. இன்னும் அதிக மாணவிகள் சேரவே, உண்டு உறைவிடப் பள்ளியாக மாற்றமடைந்தது. 1887ஆம் ஆண்டு இந்தப் பணிகளைச் செவ்வனே செய்த மார்கரெட் மரணம் அடைந்தார். கூடுதல் கட்டிடம் கட்ட ஸ்காட்லாந்து லேடீஸ் சொசைட்டி பணம் வசூல் செய்து தர, அநாதை மற்றும் போர்டிங் பெண் குழந்தைகளுக்கு புதிய பள்ளி கட்டும் அவசியம் ஏற்பட்டது. 1889 வரை எம்.சி.சி. எஸ்பிளனேட் பகுதியில் இந்த பள்ளி இயங்கி வந்தது. அந்த ஆண்டு வில்லியம் மில்லர் என்ற மிஷனரி இன்று நார்த்விக் பள்ளி இருக்கும் இடத்தை 12000 ரூபாய்க்கு வாங்கினார். 1889ம் ஆண்டு ஏப்ரல் 3 அன்று பள்ளி இந்த இடத்தில் 150 விடுதி மாணவிகள் மற்றும் 100 நேரடி மாணவிகளுடன் இயங்கத்தொடங்கியது. 1911 ல் இன்டர் மீடியேட் வகுப்புகள் இந்தப் பள்ளியில் தொடங்கப்பட்டன.

1915ம் ஆண்டு முதலாம் உலகப்போரின் போது பள்ளியை ராணுவம் வசம் அரசு ஒப்படைத்தது. பள்ளி வகுப்பறைகள் சிப்பாய்களைத் தங்க வைக்க பயன்படுத்தப்பட்டன. பள்ளிக் குழந்தைகள் செங்கல்பட்டு ஆண்டர்சன் பள்ளிக்கு மாற்றப்பட்டார்கள்.

மாணவிகளுக்கு எண்ணையும் எழுத்தையும் மட்டுமே கற்பிக்கும் கூடமாக இல்லாமல், அவர்களது எதிர்காலத்திற்கும், வாழ்வாதாரத்துக்கு ஏதோ ஒன்றை செய்ய வேண்டும் என்று மிஷனரிகள் நினைத்தார்கள். பள்ளிப்படிப்பு மட்டும் போதாது என்பதை உணர்ந்தவர்கள், நார்த்விக்கில் பள்ளிப் படிப்பை முடித்த பெண்கள் கல்லூரி செல்ல ஏதுவாக 1915ம் ஆண்டு மகளிர் கிறிஸ்துவக் கல்லூரியைத் திறந்தார்கள். நார்த்விக்கில் பள்ளி இறுதிப்படிப்பை முடித்த பெண்களுக்கு மகளிர் கிறிஸ்துவக் கல்லூரியில் பி.ஏ. படிக்க முன்னுரிமை அளிக்கப்பட்டது. அதன் தொடர்ச்சியாக 1926ம் ஆண்டு ஞானோதயா ஆசிரியர் பயிற்சிப் பள்ளியும் தொடங்கப்பட்டது. நார்த்விக்கில் பள்ளிப் படிப்பை முடித்து பட்டப் படிப்பை எட்ட முடியாத பெண்களுக்கு வேலைவாய்ப்பு ஏற்படுத்தவே இந்த ஆசிரியர் பயிற்சிப்பள்ளி தொடங்கப்பட்டது. 1891ஆம் ஆண்டு தொடங்கப்பட்ட புதுப்பேட்டை ஆங்கிலோ இந்தியன் மற்றும் ஏழை இந்தியப் பெண்களுக்கான பள்ளி, 1929ஆம் ஆண்டு நார்த்விக்குடன் இணைக்கப்பட்டது. அதன் கட்டிடங்களும், பள்ளி இயங்கிய இடமும் மிஸ் பெயின்ஸ் கட்டுப்பாட்டுக்கு வந்தன. அவர் அங்கு பெயின்ஸ் பள்ளியைத் தொடங்கினார். ஆக நார்த்விக் என்ற ஒற்றை விதையிலிருந்து மகளிர் கிறிஸ்துவக் கல்லூரி, ஞானோதயா ஆசிரியர் பயிற்சிப்பள்ளி மற்றும் பெயின்ஸ் பள்ளி உருவாயின!

**கேள்விகளும் எச்சரிக்கையும்:-**

கிறித்தவ திருமண்டலங்களால் நடத்தப்படும் கல்வி மையங்கள் இன்றும் சேவையாக சிறப்பாக நடத்தப்படுகின்றனவா? சில மூடும் தருவாயில் உள்ளன... சில சிறப்பாக செயல்படுகின்றன ஆனால் சேவை மனதோடு அல்ல. அரும்பாடுப்பட்டு மக்களின் நன்மைக்கென்று ஆரம்பமான இந்த தலங்களின் நிலை ஏன் இப்படி கவலைக் கிடமாக மாறிவிட்டன? இந்த பள்ளிகளிலும் கல்லூரிகளிலும் படித்து பயனுற்ற சபை மக்கள் ஏன் அவற்றின் நலன் பற்றி கவலைப்படுவதில்லை. காலத்திற்கு ஏற்றார் போல் சேவைகளை மேலும் மெருகூட்டி சமுதாய மேம்பாட்டிற்காக அர்பணிப்போடுச் செயல்பட ஏன் முன்னெடுப்புகள் இல்லை. பதில்கள் எளிதாக கிடைப்பதில்லை.

ஆனால் இவ்வாறு பள்ளிகளையும் கல்லூரிகளையும் நமக்கு உண்டாக்கிச் சென்ற ஜான் ஆண்டர்சன் ஐயாவின் வார்த்தைகள் நம்மை தட்டி எழுப்பட்டும்.... **“ஒருவேளை மதபோதனை செய்வதற்காக நாம் இந்த பள்ளிகளை விட்டு விடும் தருணம் ஏற்பட்டால், நமது பலம் நம்மை விட்டு அகலும் என்றே சொல்ல வேண்டும். கல்வி பணியே நமது மேசையாகவும், நமது பிரசங்க பீடமாகவும், நமது பேராசிரியர் நாற்காலியாகவும் இருக்கவேண்டும்”** சேவையும் கிறிஸ்துவ போதனையும் இரண்டல்ல ஒன்றே என்பதை ஆணித்திறமாக நிலைநிறுத்துகிறார்.

சிந்திப்போம், ஜெபிப்போம், செயல்படுவோம்.

நன்றி: நிவேதிதா லூயிஸ் (Historian, Author)
பி. தயானந்தன் (Retd. Professor, Madras Christian College)

- ரோடா அலெக்ஸ்

## கிறித்தவ மிஷனெரிகளின்

# கல்விப்பணி மதமாற்றும் நோக்கமா?

இந்தியாவில் காலடியெடுத்து வைத்த கிறித்தவ மிஷனெரிமார்கள் கிறித்தவச் சமயநெறிகளைப் பரப்பும் நோக்கோடு வந்தவர்கள் தான். ஆனால் இங்கிருந்த கொடூரமான பெண்ணடிமைத்தனம், அநியாயமான சாதீயப் படி நிலைகள், குலத்தொழில் எனும் கட்டாயத்தால் வறுமையின் பிடியில் சிக்கித்தவித்த மக்கள் கூட்டம் போன்ற சமூகக் கட்டமைப்பு அவர்களைக் கதிகலங்க வைத்ததோடு அவற்றை களையும் சமூகப்பணியை கையில் எடுக்க வேண்டியதாயிற்று. அதை தான் இச்சமூகம் அவர்களைத் தன்னை சுத்திகரிக்கும் பணியில் பயன்படுத்திக் கொண்டது என்பேன்.

இங்கிருந்த மக்கள் தங்கள் மிக மோசமான நிலைமைகள் மாற்றப்படதக்கதல்ல எனவும் அது தங்களது ஊழ்வினையின் பயன் அதாவது தங்கள் விதி எனவும் நம்பவைக்கப்பட்டிருந்தனர். அதற்கென்றே தங்களது மத கொள்கைகளைத் துணைக்கு இழுத்து அப்பாவி மக்களின் மனங்களைப் பலவீனமாக்கியே வைத்திருந்தனர். இதனால் மக்கள் தாங்கள் அடிமைப்பட்டிருக்கிறோம் என்ற உணர்வின்றி காலாகாலமாக விடுதலைக்கான வழிகளை சிந்திக்கும் திறனை முற்றிலும் இழந்திருந்தனர்.

இந்நிலையில் மிஷனெரிகள் தங்களது சமயக் கொள்கைகளைப் பரப்புவது அர்த்தமற்றது என்பதை உணர்ந்திருந்தனர். எனவே கல்வி என்ற அறிவாயுதத்தைக் கரத்திலெடுத்து மக்களை உணர்வடையச் செய்யும் வழிகளைச் சிந்திக்கலாயினர். கல்வி, அன்றைய இந்தியாவில் உயர்சாதியினருக்கு மட்டுமே உரிய சொத்தாக இருந்த நிலையை மாற்றியமைக்க துணிந்தனர். தங்களது அறிவொளியால் கல்வியைப் பட்சபாதமின்றி அனைத்து தரப்பினருக்கும் பகிர்ந்தளித்தனர். அடிப்படைக் கல்வி முதல் தொழில்கல்வி வரை முறையான கல்வியை வழங்கத் திட்டமிட்டு செயல்பட்டனர்.

இம்மாபெரும் புரட்சிகரமான கல்விப் பரவலால் எழுந்த விழிப்புணர்வு அதை விரும்பாதோரால் மதமாற்றுக் கல்வியாக சித்தரிக்கப்பட்டு பேசப்பட்டது. மதம் மட்டுமே மாற்றப்பட வேண்டும் என்ற நோக்கில் மிஷனெரிகள் செயல்பட்டிருந்தால் கல்வியை எழுதவும் படிக்கவும் மட்டுமே கற்பித்து விவிலியத்தை வாசிக்க எளிதாக கற்பித்திருக்கலாம். அத்தோடு மக்களின் அறியாமையை தங்கள் மதம் மாற்றும் பணிகளுக்கு சாதகமாகவும் தானே பயன்படுத்தியிருக்க வேண்டும்...! ? ஆனால் அறியாமைகளை முழுமையாக அகற்ற கல்வியினால் மட்டுமே முடியும் என்ற உண்மையை அறிந்து தாங்கள் சென்ற இடங்களிலெல்லாம் பள்ளிகளை ஏற்படுத்தி அதில் பணியாற்ற ஆசிரியர்களையும் பயிற்றுவித்து பணித்தனர். ஆசிரியர் பயிற்சிப் பள்ளிகளை (செமினெரி) ஏற்படுத்தி சிறந்த ஆசிரியர்களை உருவாக்கினர். (Rhenius Jr.(ed), Memoir of Rev C.T. Rhenius) பள்ளிகளுக்குத் தேவையான பாட புத்தகங்களையும் மிஷனெரிகள் தாங்களாகவே எழுதியிருக்கின்றனர். குறிப்பாக நமது சமூகத்தில் மலிந்து கிடந்த அறிவியலுக்குப் புறம்பான மூட நம்பிக்கைகளை தோலுரித்துக் காட்டி உண்மையை உணர வைத்தனர்.

இதில் கி.பி 1814 ஆம் ஆண்டு இந்தியாவிற்கு வந்த மிஷனெரி இரேனியசும் இப்பணியை மிக சிறப்பாக செய்திருக்கிறார். இவரால் தமிழில் மாணவர்களுக்காக எழுதப்பட்ட பூமிசாஸ்திரம் என்னும் நூல் ஆசியாவிலேயே முதன் முதலில் எழுதப்பட்ட அறிவியல் நூலாக உள்ளது. தமிழில் முதன் முதலாக வரலாறு, பூகோளம், பொது அறிவு நூல்கள் போன்றன இரேனியஸ் என்ற



மிஷனெரியினால் தான் எழுதப்பட்டு அவர் ஏற்படுத்திய பள்ளிகளில் பாட நூலாக பயன்படுத்தப்பட்டது. மொழி தான் ஒரு சமூகத்தின் வளர்ச்சிக்கு அடிப்படை என்பதை உணர்ந்து மிஷனெரிகளாக வந்தவர்கள் தம் பணிகளினூடாக தமிழ் மொழி வளர்ச்சியிலும் தீவிரமாக இறங்கினர். செய்யுள் வடிவிலிருந்த தமிழைப் பேச்சு வழக்கில் எழுத்து வடிவமாக்கி அனைவரும் எளிதில் கற்கும் உரை நடைவடிவத்தை ஏற்படுத்தியவர்கள் இந்த அயல்நாட்டு மிஷனெரிமார்களே. இன்றும் நமது கற்றல் கற்பித்தலில் அவர்கள் ஏற்படுத்திய இந்த உரை நடை வடிவமே பயன்பாட்டில் இருக்கிறது என்பதை எவருமே மறுக்க முடியாது.

மதமாற்றத்திற்காக தான் கல்வியளித்தனர் என்றால் அவர்கள் மட்டும் இந்திய மொழிகளைக் கற்றுக் கொண்டு தங்களது ஆங்கிலமொழியில் கல்வி புகுட்டியிருக்கலாம். ஆங்கிலத்தில் பயிற்றுவிப்பது அவர்களுக்கு மிக எளிது. ஆனால் தாய்மொழி கல்வியே மக்களின் சிந்தனைத் தெளிவிற்கும் அறிவு வளர்ச்சிக்கும் வித்திட முடியும் என்பதை அறிந்தே தாய்மொழி வழியாக கல்வியளித்தனர். சாதி மத பேதமின்றி அனைவரது கல்வி கற்கும் வழிகளையும் சுதந்திரமாக்கினர்.

18 ஆம் நூற்றாண்டில் இங்கு கிழக்கிந்திய கம்பெனி நிலைக்கொண்ட போது அதில் பணிபுரிய இந்தியர்கள் தேவைப்பட்டனர். அந்நிலையில் அன்றைய பிராமணர்களே படித்தவர்களாக இருந்தபடியினால் அவர்கள் தான் அதிகளவில் அக்கம்பெனிகளில் பணிபுரிந்திருக்கின்றனர். வேலை பெற வேண்டி ஆங்கிலத்தையும் அன்றைய ஆங்கிலேயர்களின் கல்வியையும் கற்றுக்கொண்ட பிராமணர்கள் மேலும் தங்களது செல்வாக்கைச் சமூகத்தில் உயர்த்திக் காட்டிக்கொண்டனர். ஆங்கிலேயர்களின் கல்வியைக் கற்பதில் ஆர்வம் காட்டினர். ஆனால் இவர்களுள் எத்தனை பேர் மதமாற்றமடைந்து இந்தியாவில் இன்றும் இருக்கின்றனர்..??.

இந்தியக் கல்வி வரலாற்றில் கி.பி 1813 ல் ஆங்கிலேயர்களின் கல்வி தொடங்கியிருப்பதாக வரலாறு தெரிவிக்கிறது. இந்நிலையில் கி.பி 1829 ல் சர் தாமஸ் மன்றோ அன்றைய கல்வி நிலையைப் பற்றி எடுத்த ஒரு கணக்கெடுப்பின் படி அந்த பத்தாண்டு காலகட்டத்தில் 12,498 பள்ளிக் கூடங்கள் இந்தியா முழுவதும் இருந்ததாக தெரிவித்திருக்கிறார். இவையனைத்துமே சாதி மதம் என்ற வேறுபாடு இன்றி அனைவருக்கும் உரிய பொதுக் கல்விமுறை. இதை இங்கு ஏற்படுத்த மிஷனெரிமார்களின் மிகப் பெரிய போராட்டங்கள் பின்னணியத்தில் இருக்கின்றன. கல்வியை உயர்சாதிகாரர்களைத் தவிர வேறு யாரும் பெற்றால் காதில் ஈயத்தை காய்த்து ஊற்றும் கொடூர கொள்கையைத் தகர்ப்பது என்பது வேற்று நாட்டிலிருந்து வந்த சமயப்பணியாளர்களுக்கு லேசான காரியமா ? பெண்கள் மிருகத்திற்கு இணையாக மதிக்கப்பட்ட காலகட்டத்தில் துணிச்சலோடு இந்தியாவில் 18 ஆம் நூற்றாண்டின் ஆரம்பத்திலேயே கல்வியளித்தது மதமாற்றும் நோக்குடன் என்றால் அது இந்தியக் கல்வி வரலாற்றைப் பிழையாக்கும் முயற்சி.

மிஷனெரி இரேனியஸ் கி.பி 1817 ஆம் ஆண்டே சென்னையில் ஒரு ஆசிரியர் பயிற்சிப் பள்ளியை ஏற்படுத்தினார். அதில் கிறிஸ்தவ மற்றும் இந்து இளைளைஞர்களோடு எவ்வித பாகுபாடுமின்றி ஒன்பது மாணவர்களை சேர்த்து தமது பள்ளியில் பணியாற்றும் நோக்கில் ஆசிரியர்களைப் பயிற்று வித்தார். ( D.A கிறிஸ்துதாஸ், திருநெல்வேலி அப்போஸ்தலர் ரேனியஸ்) பெண் ஆசிரியர்களுக்கான ஆசிரியர் பயிற்சிப்பள்ளி கி.பி 1823 ஆம் ஆண்டு பாளையங்கோட்டையில் நிறுவி பயிற்று வித்தார். இப்பள்ளி விடுதியோடானது. இந்தியாவிலேயே இரண்டாவது விடுதி பெண்கள் பள்ளியாக வரலாற்றில் இடம் பிடித்த இப்பள்ளி இப்போதும் அதற்கு சாட்சியாக அதே இடத்தில் மேரி சார்ஜண்ட் பெண்கள் மேல்நிலைப் பள்ளியாகத் திகழ்கிறது. ஆக, பயிற்சிப் பெற்ற இந்தியப் பெண்கள் ஆசிரியர்களாக கி.பி 1823 க்குப் பிறகு பணியாற்றி வந்திருக்கின்றனர்.

இப்பள்ளிகளெல்லாம் மாணவர்களை மதம் மாற்றும் நோக்குடன் ஏற்படுத்தப்பட்டதென்றால் இன்றைய இந்தியாவில் கிறித்தவத்தைத் தவிற பிற மதங்களைப் பார்க்க முடியாது என்பதே நிதர்சனம்.

இந்தியாவில் ஆதிக்க சாதியினரை சற்றும் சட்டைச் செய்யாமல் சாதீயத்தின் காரணங்களை புரிந்து கொண்டு சமூகத்தின் அடித்தள மக்கள் வரை கல்வியைக் கொண்டுச் சென்றவர்கள் கிறித்தவ மிஷனெரிகளே.

**Dr.ஜான்சி பால்ராஜ், வன்னியன் குடியிருப்பு**

# ‘ஜெபத்தைக் கேட்கும் எங்கள் தேவா’

## பாடல் ஆசிரியர் வரலாற்றுக் குறிப்பு

அருள்திரு ஐ.ஜே ஐயாதுரை (1890 - 1973)

இந்திய மிஷனெரி சங்கம் அனுப்பிய முன்னோடி மிஷனெரிகளில் ஒருவரே ஐ.ஜே. ஐயாத்துரை ஐசக் இயேசுவடியான் ஐயாத்துரை என்ற முழுப் பெயர் கொண்ட இவர், 1890 ஆம் ஆண்டு பிறந்தார். திருநெல்வேலி மாவட்டத்திலுள்ள இடையன்குளம் என்ற கிராமத்தில் திரு. ஐசக் தேவசகாயம், திருமதி. செல்வநாயகம் அம்மாள் தம்பதியருக்கு திருமணமாகி ஏழு ஆண்டுகளுக்குப் பின் பிறந்த மூத்த மகன் தான் ஐ.ஜே. ஐயாத்துரை அவர்கள். திரு. ஐசக் தேவசகாயம் அவர்கள் Inspector of Schools என்ற பணியினை செய்தவர்கள். திருமதி. செல்வநாயகம் அம்மாளின் பொருத்தனையில் தேவன் அவர்களுக்கு ஈவாக கொடுத்த கர்ப்பத்தின் கனி ஐ.ஜே. ஐயாத்துரை அவர்கள்.

தமிழ் ஆசிரியராக தன் பணியைத் பங்களாச் சுரண்டையில் உள்ள மிஷன் பள்ளியில் துவக்கிய இவர்,. மிஷனெரி ஊழியத்தில் மிகவும் ஆர்வம் கொண்டு அநேக கிறிஸ்தவ பாடல்களை எழுதியுள்ளார். நற்செய்திப் பணியில் வாஞ்சை கொண்டதின் காரணமாக, ஆசிரியர் பணியைத் துறந்து 1915-ஆம் ஆண்டு தோர்ணக்கல் பேராயர் மகாகனம் வே.சா.அசரியா அவர்கள் திருநெல்வேலிக்கு வருகை தந்து திரும்பும் போது திரு. ஐ.ஜே ஐயாதுரை அவர்களை தன்னோடு அழைத்துச் சென்றார். புதிய பணித்தளமான ஜட்சர்னாவில் மிஷனெரியாக நியமித்தார்.

ஏழு மாதம் தோர்ணக்கல்லில் தங்கி தெலுங்கு கற்று பின் கனம் டி. எஸ் தாவீது ஐயரவர்களின் மேற்பார்வையில் ஜட்சர்னாவில் ஒரு வருஷம் ஊழியம் செய்தார். பின் ஐ.எம். எஸ் முதல் மிஷனெரி கனம் சாமுவேல் பாக்கியநாதன் அவர்களுக்கு உதவியாகவும், முப்பார சேகரகுரு கனம் சீனிவாசன் ஐயரவர்களுக்கு உதவியாகவும் பணியாற்றினார். மிஷனெரிமார்கள் இப்பகுதிக்கு செல்லும் முன் இது வேங்கை புலி வேட்டையாடப்பட்ட பகுதியாயிருந்தது. மலைப்பாம்புகளும் அதிகம் உண்டு.

ஊழிய வாஞ்சையின் மிகுதியால் கிராமங்களிலேயே தங்கிவிடும் இவர், தங்குவதற்குக் கூட வீடு கிடைக்காத நிலையில் மொட்டை மாட்டு வண்டியின் அடியில் தங்கி, பல இன்னல்களையும். இடையூறுகளையும் கடந்து, மக்களுக்குத் தொண்டாற்றினார். இவர் சிறந்த எழுத்தாளராகவும் விளங்கினார். இரட்சண்ய யாத்திரிகம் என்ற ஒற்றைத்தாள் பிரதியை அச்சிட்டு தான் செல்லுமிடமெங்கும் விநியோகித்து வந்தார்.

மனந்திரும்பிய மைந்தன், இயேசுவின் பிறப்பு, உயிர்த்தெழுதல், மோட்ச பிரயாணம் போன்ற நிகழ்ச்சிகளை நிழற்படம் மூலம் மக்களுக்குக் காண்பித்து, அவர்களை கிறிஸ்துவின் பாதையில் நடக்கச் செய்தார். **‘ஜெபத்தைக் கேட்கும் எங்கள் தேவா’** என்ற மிகச்சிறந்த பாடலை எழுதி, அதற்கு இசையும் தந்து அநேகமாயிரம் பேர் இப்பாடலைப் பாடும்படியான ஒரு தருணத்தை ஏற்படுத்தினார். மேலும் பலப் பாடல்களை எழுதி மக்கள் ஆவிக்குரிய வளர்ச்சியில் சிறந்து வளர அவர்களை உற்சாகப்படுத்தினார்.

ஒருமுறை ஒளிவிசித்திரப்படம் காட்டி ஊழியம் செய்து கொண்டிருந்தனர். அது முதல் உலக மகாயுத்த காலம். கண்ணாடியினால் மக்களை மயக்கி யுத்தத்திற்கு பிடித்துக்கொண்டு போகிறார்கள் என்ற தவறான செய்தி பரவி வந்ததினால் அதிகமான மக்கள் பயத்தினால் இப்படக் காட்சியைப் பார்க்க வரவில்லை. தொடர்ந்து ஒரு போலீஸ் ஸ்டேஷன் சுவரில் படம் காட்ட உத்தரவு கேட்ட பொழுது படத்தின் சாயம் சுவரில் விழுந்து விடும் என்று பயந்து அனுமதி மறுக்கப்பட்டது. தொடர்ந்து அவர்களுக்கு விளக்கி அவருக்கு எந்த சேதமும் வராது என்று உத்திரவாதம் கொடுத்து படக்காட்சியை மிஷனெரி நடத்தியுள்ளார்.



ஒரு நாள் மிஷனெரி ஐ.ஜே ஐயாத்துரை அவர்களும் சில ஆசிரியர்களும் ஒரு கிராமத்தின் வழியாய் போய் கொண்டிருந்த போது சில பெண்கள் ‘மஞ்சி கள்ளு, போஸ்தானு ரண்டி‘ என்று அவர்களை அழைத்துள்ளனர். நல்ல மதுரமான கள்ளு, சாப்பிட்டு விட்டு போங்கள் என அதற்கு அர்த்தம். ஆனால் மிஷனெரி அப்பெண்களை மிகவும் கடிந்து கொண்டுள்ளார்கள். குடிப்பது பாவம் என்று கண்டித்து உணர்த்தியது மறக்க முடியாதது.

மிஷனெரியின் பணியினிமித்தமும், அவர்களின் செயல்பாடுகளினாலும் அரசு அலுவலகங்களில் அவர்களுக்கு மரியாதை கிடைத்தது. மரத்தடியில் நின்ற மிஷனெரிமார்கள் அரசு அலுவலகங்களில் மரியாதையுடன் நடத்தப்பட்டனர். ஒரு முறை காலரா நோய் அதிகமாய் தாக்கியது. அநேகர் பயந்து ஊரைவிட்டே ஓடிவிட்டனர். மிஷனெரி ஐ.ஜே ஐயாத்துரை எருக்கல இன மக்கள் வாழும் பகுதியில் குடியிருந்தார். சாயங்காலமான போது மக்கள் வீட்டை விட்டே வெளியே வர பயந்த போதிலும், குடிசைகள் மத்தியில் உள்ள புளிய மரத்தடியில் கிறிஸ்தவர்கள் கூடி பாட்டு பாடி ஜெபம் பண்ணினது, ஊருக்கே ஆச்சரியமாயிருந்தது.

மிஷனெரி ஐ.ஜே ஐயாத்துரை மூலம் நடந்த சில அற்புதங்களையும், அவர் செயல்பாடுகளையும் கண்டு அப்பகுதி மக்கள், இவர் ஒரு மந்திரவாதி என்று எண்ணினர். இப்படியாக நல்ல அர்ப்பணிப்போடும், தியாகத்தோடும், தரிசனத்தோடும் அருள்திரு. ஐ.ஜே ஐயாத்துரை அவர்கள் தெலுங்கு தேசத்தில் ஐ.எம்.எஸ் ஊழியராக சிறப்பான ஊழியம் செய்தார்.

தொடக்கப் பள்ளிகளையும், நடுநிலைப் பள்ளிகளையும் ஆரம்பித்து, கல்விப் பணியை உற்சாகப்படுத்தினார். இவர் கௌரவ மாஜிஸ்திரேட்டாக பணியாற்றி, குடும்பத்தில் ஏற்படும் பிரச்சினைகளையும், சண்டை சச்சரவுகளையும் சுமுகமாக தீர்த்து வைத்தார். 1941 ஆம் ஆண்டு இவரின் ஊழியத்தின் பயனாக ஒரு கிராமமே கிறிஸ்துவை ஏற்றுக்கொண்டார்கள். ஒரே சமயத்தில் 88பேர் திருமுழுக்குப் பெற்றனர். இவரின் அயராத உழைப்புப் பலரை ஆச்சரியப்படுத்தினாலும், தமது வாழ்வை கிறிஸ்துவுக்குள் சாட்சி பெறச் செய்தார்.

**தொகுப்பு: அருள்திரு. D.அல்பர்ட்**
**ஐ.எம். எஸ் மேலாளர், ( நிதி & நிர்வாகம்) (ஓய்வு)**

தமிழ் நாட்டின் தனிப்பெரும் நாவலாசிரியர்

அ மாதவையா அவர்களின்

# கிளாரிந்தா

தமிழ்நாட்டில் வெளிவந்த முதல் வரலாற்று நாவல்

(வரலாற்று நெடுந்தொடர் – 7)

**லாலியின் வெறி**

1758ம் ஆண்டு, ஜூலை மாதம் ஐந்தாம் நாள், இரவு பத்து மணி. வல்லத்தில் சந்நியாசியின் வீட்டைச் சார்ந்திருந்த தோட்டத்திலிருந்த ஓலை வேய்ந்த சாவடியில் அவர்கள் கூடியிருந்தார்கள். சந்நியாசி மான்தோலில் அமர்ந்து மூலைத்தூணில்சாய்ந்துகொண்டிருந்தார். அரசர்அவரருகில்தாழ்ந்த திண்டு பொருந்திய ஆசனமொன்றல் அமர்ந்திருந்தார். அவருக்குப் பின்னால் அமாத்யா நின்று கொண்டிருந்தார். பிரதானரும், சேனாபதி மங்கோஜியும் திவான் ராமண்ணா பண்டிதரும் எதிரில் விரித்திருந்த சமுக்காளத்தின் மீது உட்கார்ந்திருந்தார்கள். வெள்ளித் தண்டின் மீது விளக்கு எரிந்து கொண்டிருந்தது. வெளியே மேகம் சூழ்ந்த நல்ல இருள். அமைதியும் கூட, அரசரின் பரிவாரத்தைச் சேர்ந்த சிறு கும்பல், குழாய்களைப் புகைத்துக்கொண்டு வெற்றிலையை மென்று கொண்டும் ஒரு பெரிய மாமரத்தடியில் இராட்சத தீப்பந்த ஒளியில் தாழ்ந்த குரலில் பேசிக்கொண்டும் நின்றிருந்தது. இன்னொரு சிறிய கூட்டம், பல்லக்குகளும் குதிரைகளும் நிறுத்தப்பட்டிருந்த வாசலருகில் நின்றுகொடிருந்தது.

திவான் ராமண்ணா பண்டிதர் பின்வருமாறு சொல்லிக்கொண்டிருந்தார். ‘அவன் பரிசுகளை எட்டியும் பார்க்கவில்லை அவை தன்னை அவமானப்படுத்துவதாக எடுத்துக் கொண்டான். அவற்றை அனுப்பிய மகாராஜாவுக்கும் அது இழிவு என்றும் சொல்லியிருக்கிறான். கோபத்தில் துடித்துக் கொண்டிருக்கிறானாம். அவன் நாகூரைக் கொடுத்துவிட்டது உண்மைதான். ஹீஸார்களின் தலைவனான பிஷர் என்பவனுக்கு இரண்டு லட்ச ரூபாய்களை வாங்கிக்கொண்டு அதைக் கொடுத்துவிட்டான். ஊரை உங்கள் மனம்போல் கொள்ளையடித்து அழித்துக் கொள்ளுங்கள் என்று வேறு சொல்லிவிட்டானாம். அவன் வருவதைக் கேள்விப்பட்டு வியாபாரிகள் தங்கள் பொக்கிஷங்களை ஒளித்து வைத்து விட்டார்களாம். அதனால் தான் நாகூரை இப்படித் தள்ளி விடுவது உசிதம் என்று நினைத்துவிட்டான். கீவாளூரைக் கொள்ளையடித்ததிலும் அவனுக்கு அதிகமாகக் கிடைக்கவில்லை. இந்த லாலி, டூப்ளேயைப்போலில்லை. பத்திரத் தொகையின் மீதிப் பணத்தை இந்த ஒன்பது வருடங்களுக்குரிய கூட்டு வட்டியோடு உடனே கேட்கிறான். அப்படி உடனே செலுத்தாவிட்டால் தஞ்சாவூரை அழித்து எரிக்கப் போவதாகவும், மகாராஜாவையும் ராஜ குடும்பத்தினரையும் சிறைப்படுத்தி மாரீஷியஸ் தீவுக்கு அடிமைகளாக அனுப்பப் போவதாகவும் பயமுறுத்துகிறான்’ என்றார்.

‘செய்வதைவிடச் சொல்லுவது எளிது’ என்றார் சேனாபதி மங்கோஜி.

‘இந்த நிலைமைக்கும் வந்துவிட்டோம்’ என்றார் சந்நியாசி விசனத்துடன். ‘ஒரு காலத்தில் நமது வாசலில் நமது முகத்துக்குக் காத்துக் கிடந்தவர்கள், நமக்குச் சுங்கம் கட்டி நம்மிடம் வியாபார உரிமைக்காக கெஞ்சியவர்கள், இப்பொழுது நமக்குக் கட்டளையிடுகிறார்கள். மகாசிவாஜி வெங்காஜியின் வம்சத்தினரைச் சங்கிலியிட்டு அடிமையாக்குவதாகப் பயமுறுத்துகிறார்கள்! இந்தப் பரங்கியர் ஆச்சரியமானவர்கள் என்பதை ஒப்புக் கொள்ளத்தான் வேண்டும்’ என்றார்.

‘பிரஹதீஸ்வரர் கோவில் கோபுரத்தில் பரங்கியர் சித்திரம் ஒன்று இருக்கிறது; ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்னால் தீர்க்க திருஷ்டியாக வரையப்பட்டது என்கிறார்கள். அப்படியானால் எப்படியும் ஒரு நாள் இந்தப் பரங்கியர் நம்மை ஆளுவார்கள். தெய்வ சித்தம் இது. தேவிகோட்டையில் ரகளை செய்தானே அந்த ஆங்கிலேய இளைஞன் சென்ற ஆண்டு வங்காள நவாபை ஓட ஓட விரட்டி விட்டானாமே! வங்காள நவாப் தான் முகலாயச் சக்கரவர்த்தியின் பெரிய மானியக்காரர்’ என்றார் ராமண்ணா பண்டிதர்.

‘பரங்கிச் சித்திரம் வெறும் புரட்டு. சுமார் நூற்றைம்பது ஆண்டுகளுக்கு முன்னால் நாயக்க மன்னர் தஞ்சையை ஆண்ட காலத்தில் அவர்கள் கோவில் கோபுரத்தில் வைஷ்ணவச் சித்திரங்களை வரைவித்தார்கள். ரகுநாத நாயக்கர் காலத்தில் ராஜ்யத்தைப் பார்க்க வந்த ரோலந்து கிரேப் என்ற டேனிஷ்காரன் சித்திரம் வரைவதில் உதவி செய்தான். அப்பொழுது தந்திரமாகத் தன் உருவத்தையும் நடுவே புகுத்தி விட்டான். எண்ணூறு ஆண்டுகளுக்கு முன் கோவிலைக் கட்டு வித்த ராஜராஜ சோழன் பரங்கிகளைப் பற்றிக் கேள்விப் பட்டிருக்கவே முடியாது. ஆமாம். இந்தப் பிரெஞ்சுக்காரன் திருவாரூரிலே இருபது பிராமணரை பீரங்கி வாயில் வைத்துச் சுட்டான் என்கிறார்களே, அது உண்மைதானா?’

‘உண்மைதான்’ என்றார் ராமண்ணா . ‘இருபது அல்ல, ஆறு பேர்.’ திருவாரூர்க் கோவில் தர்மகர்த்தாக்கள், லாலி படை ஊரை நெருங்கி வந்ததும், கோவில் நாசமாகிவிடக் கூடாதே என்று பயந்து அவனை நேரில் சந்தித்து மரியாதை செலுத்திவிட்டு வரலாம் என்ற நோக்கத்துடன் அவனிடம் சென்றார்கள். அடலை ஆனால் அவர்களை ஒற்றர்கள் என்று நினைத்து விட்டான். அவர்கள் எவ்வளவோ மறுத்துச் சொல்லியும், கெஞ்சியும் கேட்காமல் பீரங்கியால் சுட்டுவிட்டான். அவன் நாசமாய்ப் போக!’ என்றார்.

ஒரு காலத்தில் இதே திருவாரூரில் மனுநீதிச் சோழன் தன் ஒரே மகன் கவனப்பிசகாக தேரையோட்டி கன்றுக் கட்டியைக் கொன்று விட்டதற்காக இளவரசன் மீது தானே தேரைச் செலுத்தி நீதியை நிலை நிறுத்தினான். இப்பொழுது ஓர் அயல் நாட்டான் இங்கு

வந்து, நியாயமான முறையில் மரியாதை செய்த குற்றத்திற்காக பிராமணர்களைப் பீரங்கி வாயில் வைத்துச் சுடுகிறான். பிரதாப். சேனாபதி நீங்கள் சிந்திக்க வேண்டிய விஷயம் தான். என்றார் சந்நியாசி

நான் போர் வீரனானால் இதைப் பழிவாங்கியே தீருவேன். ஆங்கிலேயர் இப்படி அடாவடிச் செயல்கள் செய்கிறதில்லை. பிரெஞ்சியர் பழிபாவத்துக்கு அஞ்சாதவர்கள், கொள்ளைக் காரர்கள். மத வெறி பிடித்துத் திரிகிறார்கள்' என்றார் மங்கோஜி.

'ஆங்கிலேயர் சற்று உறுதியானவர்கள். நய நுட்பமறிந்தவர்களுங்கூட. ஆனால் இந்த அந்நியர்கள் எது செய்வார்கள் எது செய்யமாட்டார்கள் என்று யாராலும் நிச்சயமாய்ச் சொல்ல முடியாது. அவர்கள் விரித்த வலையில் வகையாய் மாட்டிக் கொண்டிருக்கிறோம். இனி நடப்பது நடந்தே தீரும். நிலைமை கவலைக்கிடமாக இருப்பதை எடுத்துச் சொல்லி திருச்சிராப்பள்ளியிலும் சென்னையிலுமிருந்தும் உதவி கேட்க வேண்டும். நவாபும் ஆங்கிலேயரும் இப்பொழுது நம்மைக் கைவிட்டால் நமது கதி அதோகதிதான்' என்றார் சந்நியாசி.

'பிரெஞ்சியர் நாகூருக்குள் நுழைந்ததுமே சென்னைக்குச் செய்தி அனுப்பி விட்டேன். திருச்சிராப்பள்ளியிலிருந்து ஏற்கனவே ஒரு சிறு படை வந்திருக்கிறது. மேற்கொண்டு அனுப்புவதாகவும் வாக்களித்திருக்கிறார்கள், உடனே ஒரு தூதுவனை அங்கே அனுப்புகிறேன்' என்றார் பிரதானர்.

'தொண்டைமானிடமிருந்தும் சேதுபதியிடமிருந்தும் துணைப் படைகளைச் சேர்த்து அனுப்பும் படியும் நவாபுக்குச் சொல்லியனுப்புங்கள். ஆங்கிலேயரும் தங்களால் அனுப்ப இயலும் துருப்புக்களையும் பீரங்கிப் பட்டாளத்தையும் அனுப்பட்டும். சென்னையிலிருந்து நேராகக் காரைக்காலுக்குக் கப்பல் படையையும் அனுப்புமாறு சொல்லுங்கள். பிரெஞ்சியருடைய போர்த்தளத்தையே தாக்க வேண்டும். இந்த அடாவடிப் பிரெஞ்சுக்காரன் இப்படி மதம் பிடித்துத் திரிய விடக்கூடாது. வந்த வழியே திரும்பிவிடச் செய்யவேண்டும். நாமும் வரிந்து கட்டிக்கொண்டு அவனை எதிர்த்துப் போக வேண்டும். அவன் இப்படி ஊர்களையும் நகரங்களையும் தீ வைத்துக் கொளுத்திக்கொண்டும், பிராமணர்களைப் பீரங்கி வாயில் வைத்து வெடித்துப் பொசுக்கிக்கொண்டும் நாட்டுக்குள் நுழைவதை எப்படியும் தடுத்தாக வேண்டும். நாம் கையைக் கட்டிக்கொண்டு அவன் வரும்வரை காத்திருந்தால் எப்படி?' என்றார் சந்நியாசி.

நான் அவ்வளவு வெட்கங்கெட்ட கோழை அல்ல. அப்படி இருந்தால் இந்த அரியணையில் உட்காரத் தகுதி வாய்ந்தவனல்ல. இந்தக் கொள்ளைக்காரனை எதிர்த்து நானே படைக்குத் தலைமை தாங்கி நடத்திச் செல்வேன். நோயற்றவனுக்கும் நோயாளிக்கும், அரசனுக்கும் ஆண்டிக்கும் ஒருநாள் இல்லாவிட்டால் ஒருநாள் சாவு வந்தே தீருகிறது. தங்கள் முன்னோரின் சொத்தையும், கோவில் தெய்வங்களையும், தங்களை நம்பியிருக்கும் பெண்டு பிள்ளைகளையும் காப்பாற்றப் போர் செய்து மடிவதைக் காட்டிலும் உயர்ந்த மரணம் வேறு என்ன இருக்கிறது?' என்றார் அரசர்.

நீ போர்க்களத்திற்குச் செல்ல வேண்டாம் பிரதாப். அது தலைநகரத்தைப் பலவீனப்படுத்திவிடும். தலைநகரம் தான் ஒரு நாட்டின் உயிர்நாடி. மேலும் அது எதிரியை அதிக கௌரவப்படுத்துவதுமாகிவிடும். சேனாபதியும் உப சேனாபதி சித்தோஜியும் படையை நடத்திச் சென்று எதிரி முன்னேறி வருவதைத் தடுக்கட்டும்' என்றார். பின் சிறிது நேரம் கழித்து, இந்தப் படையெடுப்பு நாமாக வருவித்துக் கொண்டது என்று தான் சொல்லவேண்டும். கொடுத்த வாக்கை மீறி சந்தாசாகிப்பைக் கொன்றது பெருந் துரோகம். என் ஆலோசனைப்படி நயமாகப் பேசி அவனிடமிருந்து பத்திரத்தை வாங்கிக்கொண்டிருக்கவேண்டும் அல்லது அந்தத் தொகைக்கு ஒரு ரசீது கொடுக்கும்படியாகவாவது அவனை வற்புறுத்தியிருக்கலாம். கொடுத்த வாக்கை மீறித் துரோகம் செய்து நெஞ்சழுத்தமாக அவனைக் கொன்ற பாவத்தினால் தான், தெய்வ கோபம் ஏற்பட்டு திருவாரூரில் அந்த ஆறு பிராமணர்களும் அநியாயமாய்க் கொலையுண்டார்களோ என்று கூடத் தோன்றுகிறது' என்றார் சந்நியாசி.

சேனாபதி மங்கோஜி சற்றுக் காட்டமாக, 'சுவாமிஜி விவேகி; நான் அவரை எதிர்த்துப் பேசுவதாக நினைக்கக் கூடாது. ஆனால் ஆறு பிராமணர்களுடைய உயிரை ஒரு மிலேச்சனுடைய உயிருக்குச் சமப்படுத்திப் பேசுவது எனக்குச் சரியாகத் தோன்றவில்லை. அதிலும் அவன் சரியான படுபோக்கிரி. குரானுக்குப் பதில் ஒரு செங்கல்லைவைத்து நாயக்க ராணியை ஏமாற்றினானே தெய்வ கோபம் இந்தப் பிரெஞ்சுப் பிசாசு மூலமாக வெளிப்படும் என்பதும் வேடிக்கையாக இருக்கிறது. சந்தாசாகிப் நமது பத்திரத்தை ஏற்கனவே பிரெஞ்சியருக்குக் கொடுத்து விட்டான். நாம் என்ன முயன்றும் அதை ரத்துச் செய்திருக்க முடியாது. பிரெஞ்சியரும் சந்தாசாகிப்பும் வெகுகாலமாகவே நண்பர்கள். பிரெஞ்சியர் நம் நாட்டில் கால் ஊன்றுவதற்கு அவன் உதவியாக இருந்திருக்கிறான். காரைக்காலை தான் அவர்களுக்குப் பரிசாக அளித்ததாகப் பீற்றிக் கொள்வான். அந்த மூர்க்கனைக் கொல்ல வேண்டியதின் அவசியத்தை நான் மகாராஜாவுக்குத் தெளிவாக எடுத்துக் காட்டியிருக்கிறேன். வாக்குத் துரோகமானாலும் அது என் சுயநலனுக்காகவோ என் குடும்ப நலனுக்காகவோ அல்ல; நாட்டின் நன்மையைக் கருதியே செய்யப்பட்டது. ஸ்வாமிஜி அதை நெஞ்சழுத்தக் கொலை என்று கூறுகிறார். ஆனால் தெய்வம் அதை அப்படிப்பட்ட பாவமாகக் கருதாது என்றே நம்புகிறேன்' என்றார்.

இருவரும் தனக்கு வேண்டிய ஆலோசகர்கள் ஆதலால் அநாவசிய வாதத்தைத் தவிர்க்கும் எண்ணத்துடன் அரசர், 'இப்பொழுது அதெல்லாம் எதற்கு? இந்த விஷயத்தில் தான் பண்டிதராவுக்கும், இல்லை, சுவாமிஜிக்கும் சேனாபதிக்கும் என்றைக்குமே கருத்தொற்றுமை இருந்ததில்லையே. நடந்தது நடந்து விட்டது. நிவிர்த்திக்க முடியாத ஒன்றைப் பற்றி வீணாகச் சிந்திப்பது அறிவுடைமை ஆகாது. சுவாமிஜியின் ஆலோசனைப்படி, மேற்கொண்டு உதவிகோரி திருச்சிராப்பள்ளிக்கும், காரைக்காலை கடல் வழியாகத் தாக்கும்படி சென்னையில் ஆங்கிலேயருக்கும் பிரதானர் செய்தி அனுப்புவார்; எதிரியை நோக்கி நமது படை எதிர்த்துச் செல்ல, சேனாபதி வேண்டிய ஏற்பாடுகளைச் செய்வார்' என்றார்.

'ஆண்டவன் கிருபையால் இன்னும் இரண்டு வாரங்களுக்குள் எதிரியை எதிர்த்துச் சண்டையிட்டு விரட்டி விடலாம்' என்றார் மங்கோஜி.

'அந்த மகாதேவன் தான் அவன் பிள்ளைகளுக்கு இரக்கம் காட்ட வேண்டும்' என்றார் சந்நியாசி.

'இன்னொரு விஷயம்' என்றார் அரசர்.

'இனிமேலும் சுவாமிஜி இவ்விடத்தில் இருப்பது பாதுகாப்பாக இருக்காது. எதிரி எந்த நிமிடமும் இந்தப் பிராந்தியங்களைப் படையெடுக்கலாம். வல்லத்து அரண் பலமானது தான். கோட்டைப் படையும் இருக்கிறது. எனினும் தஞ்சைக் கோட்டையைப்போல் பாதுகாப்பானது அல்ல. மேலும் சுவாமிஜி அருகில் இருந்தால் இந்த இக்கட்டுச் சமயத்தில் ஆலோசனைக்காக அடிக்கடி அவரைக் கலந்து கொள்ளலாம். ஆதலால் அவர் குடும்பத்தோடு தஞ்சைக் கோட்டைக்கு வந்து விடட்டும். வேண்டிய வாகனங்களையும் வழித்துணையையும் அமாத்யா நாளைக் காலை அனுப்பி வைப்பார்.

அப்படியே நடக்கட்டும். பிரதாப், நீ காட்டும் சிரத்தைக்கு நான் மிகவும் கடமைப்பட்டவன். என்னைப்போன்ற கிழட்டுத் துறவி எதற்கும் அஞ்ச வேண்டியதில்லை. ஆனால் மற்றவர்களும் இருக்கிறார்களே. இந்த ஏழு ஆண்டுகளாக நான் மிகவும் மகிழ்ச்சியாக இருந்தேன். மேடு பள்ளம் நிறைந்த பலதரப்பட்ட என் வாழ்க்கையை நினைத்துப்பார்க்கும் போது இந்தப் பருவம் தான் உண்மையிலேயே மகிழ்ச்சியானது என்று சொல்ல வேண்டும். மகாதேவன் என்னிடம் மிகுந்த கருணை காட்டியிருக்கிறான். பயனற்ற இந்த உயிரை அந்த அனாதைக் குழந்தைக்காகக் காப்பாற்றி வைத்திருந்தார் போலும். ஒரு நல்ல இளைஞனைப் பார்த்து அவளைக் கொடுத்து விட்டேனானால் என் கவலையெல்லாம் ஒழிந்துவிடும். காசிக்குச் சென்று விஸ்வநாதன் காலடியில் உயிரை விட்டுவிடலாம்' என்றார் சந்நியாசி.

இந்தத் தொல்லைகள் எல்லாம் தீரட்டும். பிறகு அதைப்பற்றி யோசிப்போம். எனது நண்பனின் மகள் கிளாவிருந்தாபாய் இப்பொழுது மிக அழகிய யுவதியாக வளர்ந்திருக்கிறாள் என்று அமாத்யா சொன்னார். சிறந்த சமஸ்கிருதப் புலமை பெற்றிருப்பதாகவும் சொன்னார். அவள் அந்தஸ்துக்குக்கும் தகுதிகளுக்கும் ஏற்றாற்போல் நல்ல கணவனாகத் தேர்ந்தெடுக்க வேண்டும். அதற்கு வேளை வரும். முதலில் இந்தப் புயல் ஓயட்டும்' என்றார் அரசர்.

அரசு பரிவாரம் உடனே தஞ்சைக்குத் திரும்பி விட்டது.

## வீரர்க்கே வெற்றி

தஞ்சைப் பெரிய கோட்டையினுள் அரண்மனை போன்ற ஒரு பெரிய வீட்டில் சந்நியாசி தங்கியிருந்தார். 1758ம் ஆண்டு ஆகஸ்டு 9ம் தேதி காலையில் அந்த வீட்டுத் தலை வாசலை யாரோ தட்டினார்கள். கடந்த ஒரு வாரமாக பிரெஞ்சுப் பீரங்கிகள் விடாமல் கோட்டைத் தளங்களைச் சுட்டுக்கொண்டிருந்தன. 7ம் தேதி, சின்னக் கோட்டையின் தென்கிழக்கு மூலையில் ஆறடி அகலத்தில் ஒரு துளையும் ஏற்பட்டது. பீரங்கி வெடிச் சத்தம், முற்றுகை ஏற்படுத்திய ரகளை, எதிரி துளை போட்டுவிட்டதால் உண்டான பரபரப்பு, இவற்றால் யாருமே தூங்கவில்லை.

ஜூலை 24ம் தேதி, சேனாபதி மங்கோஜி தனது பாதிப்படையான 3000 குதிரை வீரரோடும், 5000 காலாட்களோடும் பிரெஞ்சுப் படையை எதிர்த்துச் சென்று வெளியில் சண்டையிட்டார். ஆனால் லாலி அவரை முறியடித்து விட்டான். ஆகவே அவர் தஞ்சைக் கோட்டைக்குள் பின்வாங்கி அங்கிருந்து பாதுகாப்பு வேலையில் ஈடுபட்டிருந்தார். திருச்சிராப்பள்ளியிலிருந்து ஆங்கிலேயர் இரண்டு சிறு துருப்புகளை அனுப்பியிருந்தனர். ஒன்று ஆங்கிலச் சிப்பாய்களடங்கியது. மற்றது புதுக்கோட்டையிலுள்ள கள்ளர் கொரில்லாக்களைக்கொண்டது. பெரிய துருப்பு வருமென்று எந்நேரமும் ஆவலுடன் எதிர்பார்த்துக்கொண்டிருந்தனர். மகுடம் அணிந்த தலை சுக மாகத் தலை சாய்க்க முடியாது. அரசர் அங்கலாய்ப்பைச் சொல்ல இயலாது. மந்திரிகள் முற்றுகை வேலையை ஒருவரோடொருவர் போட்டியிட்டு மும்முரமாகச் செய்தனர். குடிமக்களும் எது வந்தாலும் எதிரிக்கு வணங்குவதில்லை என்று உறுதியாக இருந்தார்கள்.

அப்பாவிப் பிராமணர்களும் தலைவிதியே என்று இருப்பவர்களும் கூட வீர உணர்ச்சியால் உந்தப்பட்டு போர் வீரர்களுக்கு உதவி செய்ய முன் வந்தார்கள். பிரெஞ்சியர் அந்தக் காலத்தில் தீவிரமாக மத சகிப்பின்மை காட்டி வந்ததால் இந்துக்கள் அவர்களை வெறுத்து வந்தனர். பெண்கள் கூட தங்கள் கணவர்களையும் சகோதரர்களையும் பாதுகாப்புப் பணியில் ஊக்கமூட்டினர். எண்பத்தைந்து ஆண்டுகளுக்கு முன்னால் மதுரைப் படை தஞ்சையை முற்றுகையிட்டுக் கோட்டையைத் தகர்த்து அரண்மனை வாசலில் வந்து நின்ற போது, தஞ்சை மன்னன் நாயக்கர் வழித்தோன்றலான விஜயராகவன் செய்ததை மெய்சிலிர்ப்புடன் நினைவுபடுத்திக் கொண்டனர். அம்மன்னன் அந்தப்புரத்தை வெடிமருந்து வைத்துக் கொளுத்திவிட்டு வாளைக் கையிலேந்தி தன்மகன் மன்னருவோடு அரண்மனையினின்று வெளியில் பாய்ந்து எதிரிகள் நடுவில் புகுந்து சண்டையிட்டு வீரமரணம் எய்தினான். அழியாப் புகழ்பெற்ற அந்த மன்னனே மீண்டும் தோன்றி வீர உணர்ச்சியை மூட்டிக் கொழுந்துவிட்டெரியச் செய்ததாகத் தோன்றிற்று. அரண்மனையின் வடமேற்கு மூலையில் இடி பாடுகளுடன் விளங்கிய அந்த நாயக்க அந்தப்புரம், வழி காட்டிச் செல்லும் ஆகாச தீபமாகத் தோன்றியது. ஆனால் கோட்டையில் துளை ஏற்பட்ட பின்னும் திருச்சிராப்பள்ளியிலிருந்து உதவி



வராததால், அஞ்சாநெஞ்சங்களும் களர்ந்து போயிருந்தன. ஆனால் துளையிட்ட பின் ஏனோ எதிரிகள் சுடுவதை நிறுத்தியிருந்தனர். இது விளங்காத புதிராக இருந்தது.

பலதரப்பட்ட யூகங்கள் எல்லாம் கிளம்பின. கோபத்தில் குமுறிக்கொண்டிருக்கும் பிரெஞ்சுக்காரன் இரவிலே கோட்டையைத் தாக்கலாம் என்றிருக்கிறானோ? அல்லது ஏதாவது ரகசியப் புதுவழியில் ஒரே போடாகப் போடலாம் என்று காத்துக்கொண்டிருக்கிறானோ? இப்படி ஒரு துளை ஏர்படுத்திய பின்னும் அதைத் தொடர்ந்து வேலை நடத்தாமல் சோம்பி இருப்பானேன்? அரசர், மந்திரிகள், படை அதிகாரிகள், போர்வீரர்கள், தொண்டர்கள், யாருமே ஒரு வாரமாக படைக்கலங்களைக் கீழே வைக்கவுமில்லை தலை சாய்க்கவுமில்லை. 8ம் தேதி இரவு கோட்டையில் பயங்கர அமைதி சூழ்ந்திருந்தது. ஆனால் ஒருவாரத்துக்குப் பின் இன்று தான் வெளியிலிருந்து சுடுவது நின்றிருந்தது. ஆகவே பாதுகாப்பில் நேரடியாக ஈடுபடாதவர்கள், ஒரு வாரமாகத் தூங்காமல் இருந்தவர்கள், எல்லாரும் இன்று உறக்க தெய்வத்தின் அரவணைப்பில் மெய்மறந்து தங்கள் வாழ்நாளில் ஒரு நாளும் இல்லாதவண்ணம் ஆழ்ந்து தூங்கினார்கள்.

ஹவில்தார் ரகோஜியும் அந்த நிலையில் தான் இருந்தார். இரவு வெகு நேரம் விழித்திருந்துவிட்டு அதிகாலையில் ஆழ்ந்து தூங்கிக்கொண்டிருந்தார். வாசல் கதவைத் தட்டியவர் நாலைந்து முறை தட்டிய பின்னரே, ஹவில் தார் திடுக்கிட்டு விழித்தார். யாரோ வீட்டுக்குள் வரவிரும்புகிறார்கள் என்று தெரிந்தது. சந்நியாசியும் வீட்டின் பக்கத்தையொட்டிய தோட்டத்தில் உலாவிக் கொண்டிருந்ததைக் கண்டார். தட்டுவது யாரென்று கவனிக்கும்படியாக அவர் தன்னைக் கூப்பிட்டுக் கொண்டிருந்ததும் ரகோஜிக்குக் கேட்டது.

'இதோ போகிறேன்' என்று பதிலுக்குக் கூறிவிட்டு வாசலுக்குச் சென்று மூன்று அடிதண்டாக்களையும் அகற்றினார். குதிரைக் குட்டியின் கடிவாளத்தைப் பிடித்தவாறே வெங்கோபா படியில் நின்றுகொண்டிருந்தான். ரகோஜிக்கு எரிச்சல் வந்தது. வாழ்க்கை குறுகியது என்பதை மறந்து விட்டுச் சிலர் தங்களுக்கு எப்பொழுதோ ஏற்பட்ட அவமானத்தை அது நிஜமோ, கற்பனையோ-மனதில் போற்றி வைத்துக் கொண்டிருப்பார்கள். ரகோஜியும் இந்த வகையைச் சேர்ந்தவர் தான். இந்தக் கதையின் முதல் அத்தியாயத்தில் சொன்னவாறு பன்னிரண்டு வருடங்களுக்கு முன் வெங்கோபா தன்னை அவமதித்ததை அவர் மறக்கவில்லை!

வெங்கோபா மரியாதையாக வணக்கம் தெரிவித்தான். ஹவில் தார்ஜி பதிலுக்கு, 'என்னய்யா வேணும் இந்த வேளை கெட்ட வேளையிலே? அந்தக் கரும் பிசாசுக்குட்டி வேறே வந்திருக்கோ ?' என்றார்.

'ஒரு நாளும் இல்லாத திருநாளாய் எதுக்காக இன்னிக்குப் போய்க் கோவிச்சுக்கிறீங்க, ஹவில் தார்ஜி?' என்றான் வெங்கோபா சுமுகமாக. மேலும்: 'நீங்க தூங்கலேன்னா, கோழி கூவாது, சூரியன் உதிக்காது அல்லது அதிருஷ்டம் நமக்கு வராதுன்னு நினைச்சுட்டிங்களா? இந்தக் கருப்புப் பிசாசைக் கொஞ்சம் பிடிச்சுக்கிடுங்க. நான் சாமிகளிடத்திலே போய் மகாராஜா சொல்லி அனுப்பிய செய்தியைச் சொல்லிவிட்டு வரேன்' என்றான்.

ஹவில்தாருக்குக் கோபம் தாங்கமுடியவில்லை. சுகமாக உறங்கிக்கொண்டிருந்தவரை நடுவில் எழுப்பி, வெங்கோபா, குதிரைக் குட்டியைப் பிடி என்று சொல்வது அநியாயமாகப் பட்டது.

நீ தானே, பிடிச்சுக்கோ அல்லது எங்கேயாவது ஒழிஞ்சு போகட்டும், நான் உனக்கு குதிரைக்காரன்னு நினைச்சுகிட்டயா என்ன? சங்கதியைச் சொல்லிவிட்டுப் போ. நான் சாமிகளிடத்திலே சொல்றேன்' என்றார்.

வெங்கோபா சச்சரவை இழுத்துக்கொள்ள விரும்பவில்லை. ஹவில்தாரைச் சட்டைசெய்யாமல் வீட்டு முன்னாலிருந்த கம்பமொன்றில் குதிரையைக் கட்டினான். தோட்டத்திலிருந்து சந்நியாசி கூப்பிட்டது அவன் காதிலும் விழுந்திருந்தது. ஆகவே பக்கத்திலிருந்த வாசல் வழியாகத் தோட்டத்துக்குள் நுழைந்து சந்நியாசியின் அருகே வந்ததும் நெடுஞ்சாங்கிடையாய் வணங்கினான். அவர் எழுந்திருக்கச் சொன்னதும் எழுந்து கைகட்டி வாய்பொத்தி அமைதியாக நின்றான்.

என்ன செய்தி, வெங்கோபா? பிரெஞ்சியர் தாக்குதலை மீண்டும் தொடங்கிவிட்டார்களா என்ன? இத்தனை வேக மாக அதிகாலையிலேயே வந்திருக்கிறாயே?' என்றார் சந்நியாசி.

சுவாமி, சந்தோஷ சமாச்சாரம். நமது எதிரிகள் ஓடி விட்டார்கள். அவர்கள் தலைவனும் அகப்பட்டிருக்க வேண்டும். ஆண்டவன் அருளாலும், உங்கள் தயவாலும் நாம் பிழைத்துக்கொண்டோம். மகாராஜா செய்தியை சொல்லி வரச் சொன்னார்' என்றான் வெங்கோபா.

'மகா தேவனைப் போற்றுவோம், மகா தேவனைப் போற்றுவோம்! ஆபத்து வேளையில் நமது குலதெய்வம் நம்மைக் கைவிடவில்லை. நமது வேண்டுதலைக் கேட்டருளினான். ஆனால் இது எப்படி நடந்தது? வெங்கோபா! நீதான் போர்வீரனா யிற்றே, எல்லாம் தெளிவாகச் சொல்லு.'

போர் வீரன் சொல்லத் தொடங்கினான்: ' நள்ளிரவில் திடீரெனத் தாக்குவார்கள் என்று பயந்து நாங்கள் துளையில்



ஆயுதபாணிகளாகத் தயாராக நின்று காத்துக்கொண்டிருந்தோம்.'

இந்தச் சமயத்தில் ஹவில்தார் நமது கிளாவிரிந்தா பாயுடன் அவ்விடம் வந்தார். அவள் வெங்கோபாவின் கதையைக் கேட்பதற்காக சந்நியாசியின் அருகில் வந்து நின்று கொண்டாள்.

**தொடரும் ...**

# மிஷனெரிகளின் (அருட்பணியாளர்களின்) கல்விப்பணி



எங்கெல்லாம் நாகரீகம் வளர்ச்சியடைந்து காணப்படுகிறதோ அங்கெல்லாம் தேடிப்பார் உன்னால் **“அருட்பணியாளரின் கல்லறையைக் காண இயலும்”** என்ற கூற்றை சத்தியாக்கும் போல், அருட்பணியாளர்கள் இயேசு கிறிஸ்துவின் அன்பைப் பகிர்ந்த பகுதிகளில் நாகரீகம் மட்டும் அல்லாது, சமூக சீர்திருத்தப் பணிகளின் மூலமாக கல்வியும் முன்னேற்றம் கண்டிருக்கிறதைக் காண இயலும்.

இந்தியாவில் 19ம் நூற்றாண்டின் முதல் பகுதியில், அதாவது 1833-ஆம் ஆண்டு முதல் கல்விப்பணியின் மூலமாக மாணவர்களை நல்வழிப்படுத்தி அவர்களையும் இயேசுவின் மந்தையில் சேர்க்கும் பணி வேகமெடுத்தது. 1833 முதல் 1853-ஆம் ஆண்டு வரைப் பெரும்பாலும் ஆரம்பக் கல்வி நிலையங்கள் வாயிலாக கல்வியை இந்தியாவிற்குக் கொடுத்தனர் அருட்பணியாளர்கள். பின்பு ஆங்கில உயர்க்கல்வி மற்றும் கல்லூரிகளின் மூலமாகவும் இப்பணி சிறப்பாகச் செயல்பட்டது. இந்த காலக்கட்டங்களில் தான் கல்வியின் மூலமாக பல சமூக சீர்த்திருத்தங்கள் நம் மண்ணில் நிகழ்ந்தது.

**கல்விப்பணியின் முக்கியத்துவம்:-**

இந்த சமூகம் சீரடைந்தமைக்கு மிக முக்கியப் பங்கு ஆற்றியவர்கள் கிறித்தவ அருட்பணியாளர்கள் ஆவர். அதிலும் குறிப்பாக வில்லியம் கேரி, ஜோஷ்வா மார்ஷ்மன் மற்றும் தென்னிந்தியாவின் சீகன்பால்க், ஹென்றி போன்றோர் இக்கல்விப் பணி தொடங்கச் செய்தனர். இந்தியாவின் தற்போதைய கல்வி முறைக்கு முன்னதாக குருகுலக் கல்வி முறை பின்பற்றப்பட்டது. இதிலே உயர்சாதி என்றழைக்கப்படும் சமூகத்தினரே கல்விப் பயில வாய்ப்புகள் வழங்கப்பட்டது. மற்ற சாதிய பிரிவைச் சார்ந்தோர்க்கு இவ்வாய்ப்பு மறுக்கப்பட்டது. இதனை நன்கு புரிந்துக் கொண்ட அருட்பணியாளர்கள் சமூகத்தில் பின்தங்கியிருக்கும் மாற்று சமூகத்தார்க்கு ஆரம்பக் கல்வியைக் கொடுத்து, அதின் மூலம் கிறித்துவிடமும் வந்து சேர்ந்தனர். அந்நேரத்தில், ஆங்கிலக் கல்வியின் முக்கியத்துவத்தை உணர்ந்த உயர் சாதியினர், அதன் மூலமாக பிரிட்டிஷ் ஆட்சியில் உயர்ந்த பதவி வகிக்க ஆசைப்பட்டார்கள். இதனைப் பயன்படுத்தி அனைவரும் இணையும் வகையில் ஆங்கில வழிக்கல்வி அருட்பணியாளர்களால் அறிமுகம் செய்யப்பட்டது. இதன் விளைவு கிறித்துவை உயர் மற்றும் மாற்று சாதியினர் அறிந்து, ஏற்றுக்கொண்டனர். அப்போது அவர்களுக்கு மனிதன் பிறப்பால் சமம், அதில் உயர்ந்தவன், தாழ்ந்தவன் வேற்றுமை இல்லை, கடவுளின் பார்வையில் அனைவரும் சமம் என்றும் போதிக்கப்பட்டது. அப்படியாக, அருட்பணியாளர்கள் கல்வியின் மூலமாக இயேசுவின் அன்பைக் கூறவும், சமூகத்தைச் சீரமைக்கவும் அரும்பாடுப்பட்டு பல முயற்சிகளை மேற்க்கொண்டனர்.

**கல்வியின் மூலமாக ஏற்பட்டச் சில சமூக சீர்திருத்தங்கள்:-**

அருட்பணியாளர்களின் கல்விச் சேவையான பாடசாலை நிறுவுதல் மற்றும் அதன் மூலம் கல்விக் கொடுத்து பல சமுதாயச் சீர்கேடுகளை மாற்றினர். முக்கியமாக, விரும்பும் யாவரும் பாடசாலைச் சென்று கல்விக் கற்கலாம். சாதி அடிப்படையில் பேதங்கள் இன்றி ஒரே பகுதியில் பயிலவும் வாய்ப்புகள் கொடுக்கப்பட்டது. அதிலும் குறிப்பாக, சிறுபான்மையினருக்கு என்று தனியே பள்ளிக்கூடங்கள் நிறுவி, அதின் மூலம் பல மாணவ, மாணவியர் பயன்பெற வழி வகுத்தது. அக்காலக்கட்டத்தில் பெண்களுக்கு கல்வி மறுக்கப்பட்டது. இதினால் பெண் குழந்தைகள் சமூகத்தில் புறக்கணிக்கப்பட்டவர்களாயும், ஒதுக்கப்பட்டவர்களாயும் காணப்பட்டார்கள். இந்த அவல நிலை மாற பல அருட்பணியாளர்கள் பல்வேறு முயற்சிகளை எடுத்துக்கொண்டு, பெண்களுக்கென்று தனி பாடசாலைகள் ஆரம்பித்து கல்விக் கொடுத்தார்கள். இன்னும் பல்வேறு மதச்சடங்குகள் மூலமாகவும் அவர்கள் சீரழிக்கப்பட்டனர். குறிப்பாக தேவதாசி முறையில் சிக்கியோர் மற்றும் கைவிடப்பட்டோருக்கும் பல விடுதிகளை ஏற்படுத்திக் கல்வியைக் கொடுத்தனர்.

எங்கெல்லாம் நாகரீகம் வளர்ச்சியடைந்து காணப்படுகிறதோ அங்கெல்லாம் தேடிப்பார் உன்னால் **“அருட்பணியாளரின் கல்லறையைக் காண இயலும்”**

**தமிழ்நாட்டில் அருட்பணியாளர்களின் கல்விப்பணி:-**

இப்போது கல்வி மற்றும் தொழில் துறையில் சிறந்து விளங்கும் பல இந்திய நகரங்கள் அருட்பணியாளர்களின் தீராத உழைப்பால் உயர்ந்தவையாகும். குறிப்பாக சென்னை, மும்பை, டெல்லி, கொல்கத்தா, கேரளா போன்ற நகரங்களில் கல்விக்கூடங்கள் அருட்பணியாளர்களின் மூலமாக அப்போதே சிறப்பாகச் செயல்பட்டது. முக்கியமாக தமிழ்நாட்டில் திருநெல்வேலியின் பாளையங்கோட்டையிலே பல்வேறு அருட்பணியாளர்களின் மூலமாக பல கல்விக்கூடங்கள் தோன்றி, புகழ்பெற்றது. அதில் சிலவற்றைக் குறித்து இக்கட்டுரையில் காண்போம்.

இந்தியாவின் அநேக பகுதிகளில் பரவலாக தேவதாசி என்ற முறை இருந்தது. இதன் மூலமாக பெண் குழந்தைகள் விபச்சாரத்திற்கு தள்ளப்படுகிறார்கள் என்றறிந்து, 1901-ஆம் ஆண்டு டோனாவூர் ஐக்கியம் ஆரம்பிக்கப்பட்டது. இதன் மூலமாக ஏமி கார்மெக்கல் அம்மா அவர்கள் பல தேவதாசி பெண்களைக் காப்பாற்றி, அவர்களுக்கு கல்வியையும், கிறிஸ்துவின் அன்பையும் எடுத்துரைத்தார்கள். இந்த ஐக்கியம் இன்றும் டோனாவூரிலே செயல்படுகின்றது. தேவதாசி முறை முற்றிலும் ஒழிக்கப்பட்டதால்,

அந்த ஐக்கியம் இன்று ஆதரவற்றோரின் கூடாரமாகவும், அருட்பணியாளர்களின் குழந்தைகள் பயிலும் கல்விக்கூடமாகவும் செயல்படுகிறது.

சாராள் டக்கர் என்ற பெண்மணியின் நண்பர்கள் சிலர் இந்தியாவின் திருநெல்வேலி வந்து, இங்கே பெண் குழந்தைகள் மற்றும் பெண்கள் சந்திக்கும் அவல நிலையைக் கண்டு அவளிடம் கூறினர். இதனைக் கேட்டு நொந்து போன அவர், எப்படியாவது இந்த பெண்களின் நிலைமாற வேண்டும் என்று எண்ணி ஆண்டவரின் துணையை நாடினார். அதன் விளைவு, தான் மாற்றுத் திறனாளியாக இருப்பினும், தன்னால் முயன்ற உதவிகளை தன் மற்றும் தன்னைச் சார்ந்தோர்களின் மூலமாக, தான் காணாத திருநெல்வேலியில் ஒரு ஆசிரியர் பயிற்சிப்பள்ளி அமைய காரணமானார். இது 1895-ல் மிகப் பெரிய பெண்கள் கல்விக் கூடமாகவும், கல்லூரியாகவும் உருவெடுத்து, தென்னிந்தியாவின் முதல் பெண்கள் கல்லூரியாக தோன்றியது.



பின்னும் C.T.E. ரேனியஸ் ஐயர், சுவார்ட்ஸ் ஐயர், பிஷப் சார்ஜெண்ட் போன்றோர் திருநெல்வேலியின் கல்வி வளர்ச்சிக்கு மிக உறுதுணையாக நின்றனர். இதன் விளைவு, திருநெல்வேலி தென்னகத்தின் ஆக்ஸ்போர்டாக மாறியது.

தமிழ்நாட்டின் மருத்துவப்பணி மற்றும் கல்வியின் ஐடா ஸ்கடரின் பெரும்பங்கை யாராலும் மறுக்க மற்றும் மறக்க இயலாது. அவர் தனது இளவயதில் மற்றவர்கள் போல், இவ்வுலகில் செல்வ செழிப்பாக வாழ வேண்டும் என எண்ணியவர். அவளின் தந்தை மருத்துவ அருட்பணியாளராக சென்னை மாகாணத்திலே சேவை செய்தார். அப்போது அவர்களுக்கு உதவியாக வந்த சகோதரி ஐடா, ஒரே நாளில் மருத்துவ வசதி இல்லாமல் பிரசவத்தில் மூன்று கைம்பெண்கள் மரித்ததைப் பார்த்து மனமுடைந்து, தன்னை மருத்துவ அருட்பணியாளராக இந்தியாவிற்குத் தத்தம் செய்தார். இதன் பிரதிபலனாக, இன்று உலகமே வியந்து பார்க்கும் சி.எம்.சி(CMS) மருத்துவக்கல்லூரியாக வானுயர்ந்து நிற்கிறது.

இப்படியாக பலரின் தியாகமும், விடாமுயற்சி நிறைந்த உழைப்பும், அருட்பணியும் இந்தியாவின் நகரங்கள் மற்றும் கிராமங்களை கல்வி வளர்ச்சி பெற செய்தது. இப்படி தன்னலமற்ற, பொதுநலத்தோடு ஆரம்பிக்கப்பட்ட கல்வி நிறுவனங்கள் பல இன்று கேட்பார் அற்று, பராமரிப்பு இல்லாமல் காணப்படுவது தான் வேதனையின் உச்சக்கட்டம். இக்கல்விக் கூடங்களின் வாயிலாக பெலனடைந்த நாம், அருட்பணியாளர்கள் பெற்ற கரிசனையோடு, நம் பாடசாலைகளை, சீரமைத்து, இன்னும் அநேகருக்கு உதவும் வகையில் நம் உழைப்பைக் கொடுத்து, மீண்டும் கிறித்துவ பள்ளிகள் வானுயர்ந்து கிறிஸ்துவின் அன்பையும், சமூக சேவைகளையும் செய்து மேலோங்கச் செய்வோம்.

**ஐ. தாமஸ் எடிசன். M.A.,B.D தென்கலம்.**



# பெண் கல்வியில் மிஷனெரிகள்

இந்தியாவில் கிறித்தவ மறையைப் பறைசாற்ற வந்த மிஷனெரிமார்களுள் பலர் சுவிசேஷப்பணியோடு சேர்த்து கல்விக்கு வித்திட்டனர். கல்வி பற்றிய அவர்களுடைய சிந்தனை இந்திய சமுகத்தில் வியக்கத்தக்க மாற்றங்களைக் கொண்டு வந்தது. குறிப்பிடத்தக்க வகையில், பெண் கல்வியில் மிஷனெரிமார்கள் முன்னோடியாகத் திகழ்ந்து சரித்திரச் சாதனை படைத்துள்ளார்கள் என்றால் அது மிகையாகாது.

தென் தமிழகத்தின் திருநெல்வேலி மிஷனில் நாசரேத்தின் வரலாற்றைப் பார்க்கும் போது அவ்வூரின் வளர்ச்சிக்காக பல மிஷனெரிகள் அரும்பாடுபட்டுள்ளார்கள் என புலப்படுகிறது. இன்றும் நாம் பார்க்கக்கூடிய விதமாக மிஷனெரிகளால் தோற்றுவிக்கப்பட்ட பல கல்வி நிறுவனங்கள் நாசரேத்தில் செயல்பட்டுக் கொண்டிருக்கின்றன. அவர்களுள் ஜேம்ஸ் ஹாப் ஐயரவர்கள் (Rev. James Hough), நாசரேத் மற்றும் அதனைச் சுற்றியுள்ள பகுதிகளில் சுமார் 200 ஆண்டுகளாக பயனளித்துக் கொண்டிருக்கும் பல கல்விச்சாலைகளை ஆரம்பித்தவராவார்.

நாசரேத்தில் மிஷனெரிப் பணியை ஆரம்பித்த வெகு சில நாட்களிலேயே கல்விச்சாலைகளை நிறுவவேண்டுமென்ற எண்ணம் ஹாப் ஐயரவர்கள் மனதில் தோன்றிற்று. அதிலும் குறிப்பாக நாசரேத்திற்கு பெருமை சேர்க்கும் வகையில் 1820ம் ஆண்டு பெண்களுக்கென்று பாடசாலையை ஆரம்பித்துள்ளார்கள். பெண் கல்வி மறுக்கப்பட்ட அக்காலகட்டத்தில் ஐயரவர்கள் எடுத்த முயற்சிக்கு, ஆரம்பகாலகட்டத்தில் சொற்ப வரவேற்பு கூட கிடைக்கவில்லை. பெற்றோர்கள் தங்களுடைய பெண் குழந்தைகளை கல்வி கற்க அனுப்ப மறுத்தனர். எனினும் ஹாப் ஐயரவர்கள் வீடு வீடாகச் சென்று பாடசாலைக்கு அனுப்பும் படி அறிவுரைகளை வழங்கினார். பல இன்னல்களுக்கிடையே பெண்களுக்கான கல்வி நாசரேத்தில் 10 பெண் பிள்ளைகளுடன் தடம் பதித்தது. சிறப்பாக இயங்கி வந்த கல்விச்சாலையானது எதிர்பாராதவிதமாக அடுத்த சில ஆண்டுகளில் தடுமாற்றம் கண்டது. மறுபடியுமாக பலர் தங்களுடைய பிள்ளைகளை பள்ளிக்கு அனுப்ப மறுத்து விட்டனர்.. இக்சூழ்நிலையின் விளைவாக 1926ம் ஆண்டு

வரை மட்டுமே இக்கல்விச்சாலை செயல்பட்டது. எனினும், இந்தியாவில் பெண் கல்வியை அறிமுகப்படுத்திய முன்னோடிகளுள் ஒருவர் என்ற பெருமைக்குரியவர் ஹாப் ஐயரவர்கள்

ஹாப் ஐயரவர்களைத் தொடர்ந்து நாசரேத் வந்த ஃபிரெட்ரிக் கேமரர் ஐயரவர்கள் (Rev. Augutin Frederick Caerrarer) மற்றும் அவரது மனைவி அனி கேமரர் அம்மையார் (Aan Caommeror) அவர்களும் இவ்வூரின் கல்விக்கென குறிப்பிடத்தக்க பங்களிப்பை வழங்கினர். நாசரேத் வந்தவுடன் அனி கேமரர் அம்மையாரின் மனதிலிருந்த பேராவல், அவ்வூரின் பெண் பிள்ளைகளுக்கென்று பாடசாலை அமைக்க வேண்டும் என்பதே. கேமரர் ஐயரவர்களும் மிகச்சிறந்த கல்வியாளராக இருந்திருகிறார்கள். கிறிஸ்தவ வரலாற்று ஆசிரியரான D.A. கிறிஸ்துதாஸ் ஐயரவர்கள், Rev. கேமரர் மிகப்பெரிய **'கல்விப்பிரியர்'** என்று **நாசரேத் மிஷன் சரித்திரம்** என்ற தன்னுடைய புத்தகத்தில் குறிப்பிட்டுள்ளார்கள். ஐயரவர்களின் இப்பேராவல், பெண் பிள்ளைகளுக்கென தன்னுடைய மனைவி கொண்டிருந்த தரிசனத்தை நிறைவேற்ற பங்காற்றியுள்ளது.

நாசரேத்தில் பெண் பிள்ளைகளுக்காக பள்ளி ஒன்றை ஆரம்பிக்க வேண்டுமென்ற நோக்கில் ஐயரவர்களும், அம்மையாரும் வீடு வீடாகச் சென்று பெண் கல்வியின் அவசியத்தை எடுத்துரைத்தனர். பெண் கல்வியின் அவசியம் உணராத அக்காலம் எளிதில் அவர்களது முயற்சியை ஏற்கவில்லை. எனினும் இவர்களின் அயராத முயற்சியினால் 1843ம் ஆண்டு நாசரேத்தில் பெண்களுக்காக பள்ளி துவங்கப்பட்டது. அனி கேமரர் அம்மையார் இப்பள்ளியின் முதல் தலைமை ஆசிரியராக பொறுப்பேற்று, அனைத்து நடவடிக்கைகளையும் தானே முன்னின்று செயல்படுத்தலாயினார். பள்ளியின் துவக்க காலகட்டத்தில் பலருடைய பழிசொல்லுக்கும் ஆளாக நேர்ந்தது. **'பெண்களுக்கு கல்வி வருமா? இதை விடப் பசுவுக்கு கல்வி புகட்டலாமே'** என்று பலரும் ஏளனம் செய்தனர். மேலும் பெண் பிள்ளைகள் பள்ளிக்கு வருவதிலும், படிப்பதிலும் கூட சீரான நிலை காணப்படாமலிருந்தது. இப்படியான பல இடையூறுகளை எதிர்கொள்ள நேரிடினும், கடவுளுக்காக செய்கிறோம் என்று இன்னும் அதிகமாக உழைத்துள்ளார்கள். பிள்ளைகளை அவர்களுடைய வீட்டிற்கே சென்று சந்திக்கும் பழக்கம் அவர்களுடைய வழக்கமாக இருந்தது. மேலும், நல்ல ஆடை மற்றும் பண உதவி என பல உதவிகளைச் செய்து பிள்ளைகளை பள்ளியில் சேர்க்க அவர்கள் விதைத்த முயற்சி வீணாகவில்லை. அதன் பலனாக பெற்றோர்கள் தங்களுடைய பெண் பிள்ளைகளை பள்ளிக்கு அனுப்ப முற்பட்டனர். பிள்ளைகளுடைய வரத்து அதிகமாகவே, 1846ம் ஆண்டு ஆலயத்திற்கு முன்னால் ஒரு சிறிய கட்டிடம் கட்டி அதில் பெண்கள் பள்ளிக்கூடத்தை நிலைப்படுத்தினார்கள். நாளடைவில் சுற்று வட்டாரப் பகுதிகளிலிருந்தும் பல பெண் பிள்ளைகள் இப்பள்ளிக்கூடத்தில் சேர்ந்தனர். நாசரேத்தின் சுற்றுப்பகுதிகளிலிருந்து மாணவிகள் பலர் வருகை தந்ததினால் உறைவிடப் பள்ளிக்கான (Boarding school) தேவை எழுந்தது. எனவே அனி கேமரர் அம்மையார் அவர்கள் 1948ம் ஆண்டின் இறுதியில் உறைவிடப்பள்ளி ஒன்றை ஏற்படுத்தினார்கள். 1849ம் ஆண்டு ஜூன் மாதம் நிலவரப்படி, அவ்விடுதியில் 68 மாணவிகள் தங்கி படித்துள்ளார்கள். அனி கேமரர் அம்மையார் அவர்களின் காலத்திற்குப் பிறகு 1962ல் கனம் ஸ்கார்பரோ அம்மையாரின் காலத்தில் இப்பள்ளி நிரந்தர போர்டிங் பள்ளியாக முன்னேற்றம் கண்டது.

மிஷனெரிமார்களின் பெரு முயற்சியினால் நாசரேத் மற்றும் அதனைச் சுற்றியுள்ள பகுதிகளில் பெண் கல்விக்கான விழிப்புணர்வு பலரையும் வெகுவாகக் கவர்ந்திழுத்தது. அந்த நேரத்தில் தான், கிறிஸ்தியாநகரம், முதலூர் ஆகிய இரு ஊர்களிலும் பெண்கள் போர்டிங் பள்ளி ஆரம்பிக்கப்பட்டிருந்தது. 1868ம் ஆண்டு எதிர்பாராத சூழ்நிலையின் நிமித்தமாக அப்பாடசாலைகள் மூடப்பட்டன. ஆகவே, கிறிஸ்தியாநகரம் மற்றும் முதலூரில் படித்துக் கொண்டிருந்தவர்கள், நாசரேத்தில் அனி கேமரர் அம்மையார் அவர்கள் நிறுவின பெண்கள் பள்ளியில் சேர்ந்தனர். இவ்வாறாக திருநெல்வேலி மிஷனில் மக்களால் விரும்பப்பட்ட பாடசாலையாக நாசரேத் பெண்கள் பாடசாலை உருவெடுத்தது.

நாசரேத்தின் வளர்ச்சியில் பெரும் பங்காற்றிய கனம் ஆர்தர் மார்காஷியஸ் ஐயரவர்கள் 1876ம் ஆண்டு நாசரேத் பெண்கள் பாடசாலையின் பொறுப்பை ஏற்றுக்கொண்டார்கள். ஐயரவர்கள் பொறுப்பேற்ற ஆரம்ப நிலையிலேயே ஆசிரியர்களுக்கான தேவையை கண்டறிந்தார். எனவே 1877ம் ஆண்டு ஆசிரியர் பயிற்சிப்பள்ளி ஒன்றை ஆரம்பித்துள்ளார்கள். இதில் 18 பேர்கள் சேர்ந்து படித்திருக்கிறார்கள். பெண்களுக்கான கல்வியை அடுத்த நிலைக்கு எடுத்துச் செல்ல வேண்டும் என்ற நோக்கில் மார்காஷியஸ் ஐயரவர்களின் செயல்பாடு பல வியக்கத்தக்க நன்மைகளை இப்பள்ளிக்கு அளித்துள்ளது. இவர்களது காலத்தில் தான் இப்பாடசாலையானது 'தூய யோவான் பெண்கள் மேல்நிலைப் பள்ளி' என்ற பெயருடன் பெண்களுக்கான உயர்தர பாடசாலையாக முன்னேற்றமடைந்தது. குறிப்பாக, தென்னிந்தியாவின் முதல் பெண்கள் உயர்தர பாடசாலை என்ற பெருமையை இப்பள்ளி கொண்டுள்ளது வரலாற்றுச் சிறப்புடையது. இத்தகைய வரலாற்றுச் சிறப்புடைய பள்ளியானது நூற்றாண்டுகளை கடந்து இன்றும் நாசரேத்தில் சிறப்பாக செயல்பட்டுக் கொண்டிருக்கிறது குறிப்பிடத்தக்கது. இவ்வாறாக நாசரேத்தில் பெண்கல்வியை மிஷனெரிமார்கள் படிப்படியாக வளர்த்தெடுத்துள்ளார்கள் என்று நாசரேத்தின் வரலாற்றுப் பக்கங்கள் தெரிவிக்கின்றன.

பெண்களுக்கான கல்வியை நினைத்துக் கூட பார்க்க முடியாத சூழ்நிலையிலும் அதனை செயல்படுத்தி, தற்கால பெண் கல்வியின் விரிவான கட்டமைப்பிற்கு அடித்தள மிட்ட மிஷனெரிமார்களின் அரும்பணி என்றும் நினைவு கூறத்தக்கது. பெண்களுக்காக மிஷனெரிமார்கள் உருவாக்கிய கல்விக் கட்டமைப்பில் ஜாதி, மத இனம் என்று எவ்வித வேறுபாடுகளின்றி அனைத்து தரப்பினரும் பயன் அடைந்துள்ளனர் என்பது உண்மை. இந்தியாவில் கிறித்தவத்தின் எழுச்சி, மிஷனெரிகளின் கல்விச்சேவையுடன் பெரிதும் தொடர்புடையதென்பது கவனிக்கத்தக்கது. நன்மை செய்ய முற்பட்டு, பல எதிர்ப்புகளுக்கும், பழிச்சொல்லுக்கும் ஆளான மிஷனெரிமார்களின் மன உறுதியும், கிறிஸ்துவின் மீதான பற்றுறுதியும் நம்மை வியப்பின் உச்சத்தில் கொண்டு போய் நிறுத்துகின்றன, சிந்திக்கவைக்கின்றன.

**ஜெனோ செல்வகுமார் C**
**அணைத்தலை**

### சி எஸ் ஐ வேலூர்ப் பேராயத்தில் RCA

# மிஷனரிகளின் கல்விப் பணி

கி.பி 1863ல் இங்கு வந்த Rev. Dr. ஜான் ஸ்கடர் தன் சகோதரர் ஏழு குடும்பங்களுடன் கல்கத்தா, இலங்கை, மதுரை, சென்னை வழியாக இங்கு வந்து, நற்செய்தி, திருச்சபை, இறையியல், மருத்துவம், தொழில், மருத்துவம் மற்றும் கல்விப் பணியாற்றினர்.



**கல்விப்பணி**

ஆங்கிலேயர் ஆட்சியில் கிராமங்களில்லை. அதிலும் சிறிய ஏழை கிராமங்களை தவிர்த்து, மேல் சாதி, பணக்காரர்களுக்கு மட்டும் கிராம பள்ளிகள் நடத்தியதால் சேரி பிள்ளைகள் அப்பள்ளிக்கு செல்ல முடியாத நிலையில் சிறு கிராமங்கள் 200க்கு மேல் தேர்ந்தெடுத்து சேரி மக்கள் வாழும் பகுதியில் ஊருக்கும் சேரிக்கும் நடுவில் நிலம் விலைக்கு வாங்கி பள்ளி, ஆசிரியர் இல்லம், விளையாடுமிடம் அமைத்து பள்ளியில்லா சிறிய கிராம சாதி பிள்ளைகளும் சேரி பிள்ளைகளுடன் சேர்ந்து படிக்க ஒழுங்கு செய்தனர் மிஷனரிகள். ஆசிரியர்களின் சம்பளம், கட்டிட பராமரிப்பு முதலியனவுடன் பிள்ளைகளுக்கு பஞ்சகால உணவும் தின்பண்டமும் அளித்து ஆரம்பக் கல்வி அளித்தனர். இதில் படித்தவர் அனைவருமே இந்துக்கள். ஆயினும் தினமும் பள்ளியில் கிறிஸ்தவ கீர்த்தனைகளும், திருமறை வசனங்களும் சிறு சிறு கதைகளும் உபதேசமும் கிராமங்களில் கிறிஸ்தவம் பரவ உதவின.

பள்ளிகளில் ஆசிரியராவதற்கு நடுநிலைப் பள்ளிகள், உயர்நிலைப் பள்ளிகள், கல்லூரிகள், ஆசிரியப் பயிற்சிப் பள்ளிகள் இருபாலர்க்கும் ஆங்காங்கு விடுதிகள் விடுதிகளில் படித்த இருபாலரில் சிறப்பு கல்வித் தகுதியானவர்க்கு உயர்நிலைப் பள்ளியும், ஆசிரிய பயிற்சியும் கல்லூரியும் (இலவச) விடுதியுடன் தோற்றுவித்தனர்.

இன்று ஆரம்பப் பள்ளிகளில் நடுநிலை, உயர்நிலை, மேல்நிலைப் பள்ளிகளாக மாறியுள்ளது.

**இறையியல் கல்வி**

கிராமப் பள்ளிகளிலேயே ஞாயிறு வழிபாடும் நடந்தது. வழிபாடு நடத்திட இறையியல் 3, 2 வருட பயிற்சி தங்கி படிக்க வேலூரில் (1860ல்) தொடங்கி உபதேசியார்களாக்கினர். இலங்கை, ALC, TELC, தென் தமிழக சீர்த்திருத்த சபைகள் இதில் பயின்றனர். இன்றும் இப்பள்ளிகள் இயங்கி வருவது மகிழ்வே. கல்லூரியில் ஆயர் படிப்பிற்கு செல்ல விரும்புவோர்க்கு ஒரு மிஷனரி தன் பணத்தில் ஒரு காலர்ஷிப் நடத்தியது. இன்றும் அப்பணியில் (TTS, UTC) பலர் போதகர்களாயினர்.

**விவசாயக் கல்வி**

கல்வி திறன் குறைவான மாணவர்களை விவசாயப் பண்ணை (360 ஏக்கரில் உள்ளது). ஆடு, மாடு, பன்றி, கோழி வளர்த்தல், பழ வகை மரஞ்செடி, கொடிகளும், விவசாய கல்வியும் கால்நடை தீவனமும், கலப்பின ஆடு, மாடு, கோழியும் கற்பித்தனர்.

தொழிற் கல்வி

கலைத்திறனுடையவர்க்கு தச்சுப் பள்ளி 40 ஏக்கரில் (KII) காட்பாடி இஸ்டிடியூட்ல் இரு பாலர்க்கும் (மின்னியல், வெல்டிங்) பயிற்சியளித்து, வெளிநாடுகளுக்கு செல்ல உதவினர். மரச் சாமான்கள் மேல் நாடுகளுக்கும் விற்றனர். இங்குள்ள பள்ளி, கல்லூரி, மருத்துவமனைகளுக்கும் மரச்சாமான்கள் செய்தளித்தனர். பெண்களுக்கு பலமனேரியில், 200 பேர் தங்கி கற்கும் தையல், எம்ராய்டரி பயிற்சியும் அளிக்கப்பட்டது.

**மருத்துவக் கல்வி**

மருத்துவப் பணிக்கான கல்வியில் வேலூர் (CMC), வந்தவாசி, இராணிப்பேட்டையில் (SMH) எண்ணற்ற துறைகளில் பயிற்சியும், கண் சிகிச்சை, மனநலம், தொழுநோய், காசநோய், பிரசவம், கிராம நல மருத்துவம் ஆகியனவும் அளிக்கப்பட்டது. இப்பணிகள் இன்று 168 வருடங்களாக நடந்து வருகிறது. இறைவனுக்கு நன்றி.

**அருள்திரு. லாசரஸ் செல்வநாதன்,**

கிறிஸ்துவுக்குள் பிரியமானவர்களே, கடந்த 2017ம் ஆண்டு அற்பமாக ஆரம்பிக்கப்பட்ட நம்முடைய **திருநெல்வேலி கிறிஸ்தவ வரலாற்றுச் சங்கம்** இது வரையிலும் பல்வேறு தடைகளையும், நெருக்கடிகளையும் கடந்து வந்திருக்கிறது. வரலாற்று ஆய்வாளர்கள், ஆசிரியர்கள், வாசகர்கள், நண்பர்கள், நலன்விரும்பிகள் ஆகியோருடைய இடைவிடா ஜெபத்தாலும், ஆதரவாலும், உதவியாலும் நம் திருநெல்வேலி கிறிஸ்தவ வரலாற்று சங்கம் தொடர்ந்து செயல்பட்டு வருகிறது. மேலும் நம்முடைய மாதாந்திர ஆய்விதழும் தடைகளின்றி வெளி வருகிறது. நம்முடைய கிறிஸ்தவ வரலாற்று சங்க செயல்பாடுகள் சிறப்பாக அமைய ஜெபத்தாலும், உடலுழைப்பாலும், பொருளாதார வழியிலும் உதவி வரும் அத்துணை நல்லுல்லங்களுக்கும் நன்றியினை தெரிவித்துக் கொள்கிறோம். தொடர்ந்து நாம் செயல்பட வேண்டிய தளங்கள் அநேகமுண்டு. இணைந்து செயல்பட அன்புடன் அழைக்கிறோம். வரலாற்று சங்கத்தின் ஓர் அங்கமாக வரலாற்றை அடுத்த தலைமுறைக்கு கொண்டு செல்லும் கருவியாவோம். சர்வ வல்லமை கொண்ட ஆண்டவரின் ஆயுதமாவோம்.

### தமிழகத்தில் சாதி பேதமற்ற

# சமத்துவ கல்வியைத் தந்த கிறிஸ்தவ மிஷனரிகள்



**இந்திய மற்றும் தமிழக சூழல்**

இந்தியாவில் 2500 ஆண்டுகளாக நடைமுறையிலிருந்த மனுதர்மம் வர்ணாசிரம தர்மம் எனும் சாதிய வேற்றுமையால் பிற்படுத்தப்பட்ட மற்றும் தாழ்த்தப்பட்ட சமூகத்தினர் கல்வியை பெறுவது எட்டாக்கனியாக இருந்தது. தமிழகத்தில் சாதிய வேற்றுமை விஜயநகர படைத்தளபதி நாகம நாயக்கர் வழி மரபினரான நாயக்கர் ஆட்சியின் போது (16 ஆம் நூற்றாண்டில்) உச்சக்கட்டத்தை அடைந்தது. வலங்கை சமூகம், இடங்கை சமூகம் என இரு பிரிவாக தமிழ் சமூகத்தினர் பிரிந்து நின்றனர். உழைக்கும் சமூகத்திடமிருந்து நிலங்கள் பறிக்கப்பட்டு உயர் வகுப்பினரிடம் ஒப்படைக்கப்பட்டிருந்தது.

**பழங்கால தமிழகக் கல்வி முறைகள்**

தமிழ்நாட்டில் குருகுலக் கல்வி முறை, ஆசிரியர் வீட்டில் தங்கியிருந்து அவருக்கு பணிவிடைகள் செய்து கல்வி கற்கும் கல்வி முறை திண்ணைப் பள்ளிக்கூடங்களில் கல்வி கற்கும் கல்விமுறை எனப் பல கல்வி முறைகள் இருந்தன.அவை அனைத்திலும் பெரும்பாலும் ஆசிரியராக பிராமண அண்ணாவிமார்களும், சிலவற்றில் வேளாள அண்ணாவிமார்களும் இருந்தனர் அவர்கள் தாங்கள் சார்ந்த சமூகத்தினரை மட்டுமே தங்கள் கல்வி நிலையத்தில் சேர்த்தனர் அவர்களுக்கு மட்டுமே கல்வி கற்பிக்கப்பட்டது

**கிறிஸ்தவ மிஷனரிகளின் வருகை**

இந்த நிலையில்தான் வாராது வந்த மாமணி போல் கிறிஸ்தவ மிஷனரிமார்கள் தமிழகத்திற்கு இறை பணியாற்ற வந்தனர் அவர்கள் மூலமாக அனைத்து சமூகத்தினரும் கல்வி பயிலும் வண்ணம் பொது பள்ளிக்கூடங்கள் திறக்கப்பட்டது ஒரு சாராருக்கு மட்டுமே இருந்த கல்வி அனைவரும் கற்கும் சமத்துவ கல்வியாக மாறியது அது குறித்த சில சம்பவங்களை மட்டும் ஆய்வு செய்வோம்




**கத்தோலிக்க கிறிஸ்தவ மிஷனரிகள் தந்த சமத்துவ கல்விப்பணி**

தமிழகத்தில் கத்தோலிக்க கிறிஸ்த்தவத்தின் கல்விப்பணி ஆசியாவின் அப்போஸ்தலர் என புகழ்ந்து அழைக்கப்படும் தூய. சவேரியார் காலம் முதல் தொடங்குகிறது. தூய. சவேரியார் 1542 மே மாதத்தில் இந்தியாவிலுள்ள கோவாவிற்கு தென் தமிழக கடற்கரை கிராமங்களில் நற்செய்திப் பணி செய்யும் நோக்கத்தோடு வருகை தந்தார். கோவாவில் ஏற்கனவே 1541 ஆம் ஆண்டு தொடங்கபட்டிருந்த தூய. விசுவாச செமினரியானது தூய பவுல் கல்லூரி என மாற்றம் பெறும் அளவுக்கு கல்விப் பணிகள் 1542 இல் ஆறு மாத காலத்திற்குள் சிறப்பாக செய்யப்பட்டன.

1532 ஆம் ஆண்டு தூத்துக்குடியில் இஸ்லாமிய மூர் போர் வீரனுக்கும் கருப்பட்டி பணியாரம் விற்பனை செய்து கொண்டிருந்த மீனவப் பெண்ணுக்கும் இடையே ஏற்பட்ட தகராறு அதைத்தொடர்ந்து மீனவப் பெண்ணுக்கு ஆதரவாக வந்த அவரது கணவருக்கும் இஸ்லாமிய போர் வீரனுக்கும் நடைபெற்ற சண்டை அதில் மீனவரது காது காதணியோடு அறுக்கப்பட்ட சம்பவம் அதைத்தொடர்ந்து குமரி முதல் தூத்துக்குடி வரையிலான மீனவ ஊர் தலைவர்களான பட்டங்கட்டியார்களுக்கும், போர்ச்சுகீசியர்களுக்கும் இடையே குதிரை வணிகர் ஜான் டி குரூஸ் மூலம் நடைபெற்று ஒப்பந்தம் அதையொட்டி ஏற்பட்ட கடற்கரை மீனவ பரதவர்களின் கிறிஸ்தவ மதமாற்றம்,

1537 - 1538 ஆண்டுகளில் இரு முறை நடைபெற்ற மீனவ பரதவருக்கு ஆதரவான போர்த்துக்கீசிய படை மற்றும் இஸ்லாமிய மூர் படைகளுக்கு இடையிலான போர்கள் இவற்றில் போர்த்துக்கீசியர் பெற்ற வெற்றிகள் அதன் மூலம் கடற்கரை கிராமங்கள் அனைத்திலும் போர்த்துகீசியர் ஆதரவில் இயேசு சபை மிஷனரிகள் நடத்திய ஊழியம் அவர்களுக்குத் தலைமை தாங்கிய முதல் மிஷனரி தூய. சவேரியார் ஆகியோரின்பணி இறை பணியோடு கூட கல்விப் பணியையும் சாதி மத வேறுபாடு இன்றி சமத்துவ பணியாக வழங்கியது. சிறந்த கல்வியாளரான தூய சவேரியார் கல்விப் பணிக்கும் முக்கியத்துவம் அளித்தார். அவரைத் தொடர்ந்து அவருக்குப் பின்னர் வந்த இயேசு சபை மிஷனரிகளால் திருவனந்தபுரம் முதல் ராமேஸ்வரம் வரையிலான மீனவ கிராமங்கள் அனைத்திலும் தொடங்கப்பட்ட பள்ளிகள் இன்று மேல்நிலைப் பள்ளிகளாகவும் கல்லூரிகளாகவும் உயர்ந்துள்ளது. தூய சவேரியாருக்கு பின் வந்த இயேசு சபை மிஷனரிகள் திருச்சி,

திண்டுக்கல், மதுரை, தூத்துக்குடி, பாளையங்கோட்டை, கோட்டார் (நாகர்கோவில்) போன்ற நகரங்களை மையமாகக் கொண்டு சாதி மத பேதமற்ற சமத்துவ கல்விப் பணியை சிறப்பாக செய்தனர்.

**தமிழகத்தில் சமத்துவ கல்விப் பணியைத் தந்த சீர்திருத்த கிறிஸ்தவ மிஷனரிகள்**




தமிழ்நாட்டில் சீர்திருத்த கிறிஸ்தவர்களின் சமத்துவ கல்விப்பணி முதல் சீர்திருத்த மிஷனரிகளான டேனிஷ் மிஷன் சார்பாக டென்மார்க் நாட்டு அரசரால் அனுப்பப்பட்ட ஜெர்மானியர்களான சீகன்பால்க், ப்ளுச்சோ ஆகிய இருவரால் 1706 முதல் தொடங்கியது. இருவரும் தரங்கம்பாடிக்கு வந்திறங்கிய காலமுதல் இறை பணியோடு பள்ளிக்கூடங்களை, தங்கிப் பயிலும் விடுதி பள்ளிக்கூடங்களை தொடங்கி பள்ளி மாணவர்களுக்கு மதிய உணவு அளித்து சாதி மத பேதமின்றி பள்ளியில் அனைத்து மாணவர்களையும் சேர்த்து சமத்துவ கல்விப் பணியை சிறப்பாக செய்தனர். இதற்காக அவ்விருவரும் உயர் வகுப்பினர் என தங்களை சொல்லிக் கொண்ட ஆதிக்க சாதியினரால் கஷ்டங்களையும் துன்பங்களையும் சந்திக்க வேண்டி வந்தது. தாழ்த்தப்பட்ட மாணவர்களை தங்களது பள்ளியில் சேர்த்து பிற மாணவர்களோடு ஒன்றாக அமரவைத்து கல்வி கற்பித்ததோடு அனைவரையும் ஒரே பந்தியில் அமரவைத்து மதிய உணவு வழங்கியதால் இருவரும் தாழ்த்தப்பட்டவர்களின் ஆதரவாளர் என்றும் இருவரும் போதித்த கிறிஸ்தவம் தாழ்த்தப்பட்டோரின் கிறிஸ்த்தவம் எனவும் அவர்களால் மொழிபெயர்க்கப்பட்ட வேதாகமம் சாதாரண தமிழர்களின் மொழி நடையில் இருந்ததால் அதை தாழ்த்தப்பட்டோர் வேதம் எனவும் பரிகாசம் செய்த போதும் தங்களது கல்வி பணியில் அவர்கள் இருவரும் சாதி மத பேதமின்றி சமத்துவ கல்வி பணியாக இறுதி வரை செய்தனர். அவர்களால் தொடங்கப்பட்ட கல்வி நிலையங்கள் இன்றளவும் தரங்கம்பாடி மற்றும் பொறையாறு கிராமங்களில் உள்ளது. அவை மேல்நிலை பள்ளி மற்றும் கல்லூரியாக உயர்ந்துள்ளது.

வட தமிழகத்தில் கனம் சீகன்பால்கு செய்த சமத்துவ கல்வி பணியை அவருக்குப் பின்னர் சுமார் 100 ஆண்டுகள் கழித்து 04.07.1814 இல் தமிழகம் வந்து சேர்ந்த நெல்லை அப்போஸ்தலர் என அனைவராலும் புகழ்ந்து அழைக்கப்படும் அருள்திரு. ரேனியஸ் ஐயரவர்கள் சிறப்பாக செய்தார்கள். முதல் ஐந்து ஆண்டுகள் வட தமிழ்நாட்டிலும் இடையிடையே தற்போதைய தெற்கு ஆந்திரப் பிரதேசத்திலும் இறைபணியோடு சாதி மத பேதமற்ற சமத்துவ கல்விப் பணியையும் செய்துவந்தார்கள்.

1820 ஆம் ஆண்டு பாளையங்கோட்டையில் புதியதாக தொடங்கப்பட்ட சி. எம். எஸ் பணித்தளத்திற்கு அவர் பணி மாறுதல் செய்யப்பட்டார். பணி மாறுதல் அவருக்கு வேதனையைக் கொடுத்தபோதும் அதை இறைத்திட்டமாகக் கொண்டு 1820 இல் பாளையங்கோட்டை வந்து சேர்ந்தார் அந்நேரம் பாளையங்கோட்டையில் இருந்த SPCK மிஷன் சபைகளை அதற்கான குருவானவர் இல்லாததால் ராணுவ குருவானவராக இருந்த அருள்திரு ஹாப்வ் ஐயரவர்கள் கண்காணித்து வந்தார்கள் மேலும் அவரால் ஆசிரியர் மற்றும் உபதேசியார் பணிக்கு மாணவர்களைப் பயிற்றுவிக்கும் பயிற்சி நிலையமான செமினரி நடத்தப்பட்டு வந்தது. அதை அவர் இரேனியஸ் வசம் ஒப்படைத்தார். செமினரியில் சாதி பேதமற்ற சமத்துவ கல்விப் பணியை கொடுக்க வேண்டும் என்பதில் உறுதியாக இருந்த இரேனியஸ் அந்த செமினரி விடுதியில் அனைத்து சாதி மாணவர்களும் ஒன்றாக அமர்ந்து சாப்பிட வேண்டும் என்பதை வலியுறுத்தினார் அதை உயர் வகுப்பினர் என சொல்லிக் கொண்ட மாணவர்கள் ஏற்க மறுத்தனர் அவர்களிடம் அனைவரும் ஒன்றாக சாப்பிட வேண்டுமென்பதை அவர் வலியுறுத்திய போது அவர்கள் உறுதியாக ஏற்றுக்கொள்ள மறுத்ததால் அந்த செமினரியை உடனடியாக மூடினார்.

ஓராண்டு கழிந்தது அனைவரும் செமினரி சென்று கல்வி கற்க விரும்பினர். அப்போது சாதி பேதமின்றி அனைவரும் சமமாக சாப்பிட வேண்டும் மற்றும் சாதி பேதத்தை எந்த வடிவத்திலும் கடைபிடிக்கக் கூடாது என்ற சட்ட திட்டத்தை எழுத்துப்பூர்வமாக ஏற்று கையெழுத்திட்டவர்களை மட்டுமே சேர்த்து மீண்டும் செமினரியைத் தொடங்கினார். அக்காலத்தில் 18 அக்ரஹாரங்களான பிராமணத் தெருக்களை கொண்டதாகவும், 6 வேளாளர் தெருக்களை கொண்டதாகவும் மற்றும் பிற சாதியினர் அனைவரையும் கொண்டதான பெரும் கிராமமாக இருந்த கல்லிடைக்குறிச்சியில் பல நூற்றாண்டுகளாக நடத்தப்பட்டு வந்த திண்ணைப் பள்ளிக்கூடங்களில் பிராமணர், வேளாளர் சாராத பிற சாதி மாணவர்கள் சேர்க்கப்படாத சூழ்நிலை இருந்தது.

1828 ஆம் ஆண்டு அருள்திரு ரேனியஸ் ஐயரவர்களால் சொல்லப்பட்ட நற்செய்தியை ஏற்று வயதான பொன்னாசாரி ஒருவர் ஞானஸ்நானம் பெற்றதால் CMS மிஷன் சபை கல்லிடைக்குறிச்சியில் உருவானது. பொன்னாசாரியின் அன்பு வேண்டுகோளை ஏற்று 1829 ஆம் ஆண்டில் CMS தொடக்கப் பள்ளிக்கூடம் ஒன்று கல்லிடைக்குறிச்சியில் தொடங்கப்பட்டது. இந்தப் பள்ளிக்கூடத்தில் சாதி பேதம் இன்றி அனைத்து சாதியினரும் மாணவர்களாக சேர்க்கப்பட்டனர் சாதி பேதமற்ற முதல் சமத்துவ பள்ளிக்கூடம் ஆக கல்லிடைக்குறிச்சி வட்டாரத்தில் இப்பள்ளி செயல்பட்டது.

இன்றளவும் TDTA தொடக்கப்பள்ளி என்ற பெயரில் செயல்பட்டு வருகிறது. சாதி மத பேதமற்ற சமத்துவ கல்வி பணியை கிறிஸ்தவ மிஷனரிகள் வழங்கியதால் நாம் இன்று உயர்ந்து உள்ளோம் அதே நிலையை கடைபிடித்து பிறர் உயர வழிவகுப்போம்..

J. ஜான் ஞானராஜ், கல்லிடைக்குறிச்சி

# தமிழ்ப் பாப்புலி

## அருள்திரு . ஹெர்பர்ட் ஆர்தர் பாப்ளி

இந்தியாவில் கிறித்தவத்தின் வித்தானது இயேசுவின் சீடர்களின் ஒருவரான தோமாவின் மூலம் கி.பி.52-ல் விதைக்கப்பட்டது. பின்னர் போர்த்துக்கீசியர்கள், டச்சுக்காரர்கள் இறுதியாக ஆங்கிலேயர் ஆகியோரின் ஆட்சிப் பரவலால் இந்தியக் கிறித்தவம் வளரத் தொடங்கியது. கிறித்துவ மறை பரப்பிற்காக வந்த இறைப்பணியார்கள் மதப்பிரசாரம் செய்வதை மட்டுமே குறிக்கோளாகக் கொள்ளாமல், இந்திய நாட்டின் பண்பாடு, மொழி, கலை, சமூகம், இலக்கியத்திற்காக ஆற்றிய தொண்டுகள் கணக்கில் அடங்காதவை. அவர்களுள் இந்தியாவில் முதன் முதலில் அச்சுக்கூடத்தை ஆரம்பித்து, வேதாகமத்தை அச்சிட்ட சீகன்பால்க், இந்தியத் துறவிகளைப் போலவே வாழ்ந்து வந்த ராபர்ட் டி நோபிலி, தேம்பாவணி எழுதிய வீரமாமுனிவர், திராவிட மொழிகளின் ஒப்பிலக்கணம் எழுதிய கால்டுவெல், திருக்குறள், திருவாசகத்தை ஆங்கிலத்தில் மொழியெர்த்த ஜி.யு. போப் போன்றோர் அனைவரும் அறிந்த அறிஞர்களாவர். ஆனால் இவர்களை போலவே வெளியுலகிற்கு அதிகம் தெரியாமல் பல்வேறு சமய, சமூக இலக்கியப் பணிகளால் தொண்டாற்றியுள்ள இறைப்பணியாளர்கள் பலர் உள்ளனர். அவர்களுள், மண்ணுக்குள் மறைந்து கிடக்கும் வைரம் போல் அறிஞர் பலர் உள்ளனர். அவர்களுள், மொழியில் புலமைத்துவமும், இசையில் பேராற்றலும், சமூக கரிசனை கொண்டவரும் எழுத்தாளர், இசை வித்தகர், மொழிப்பெயர்ப்பு அறிஞர் என்ற பன்முகம் கொண்டவரான Rev. H.A பாப்ளியும் குறிப்பிடத்தகுந்தவர் ஆவார்.



**வருகையும் பணியும்**:

இங்கிலாந்து நாட்டின் தலைநகர் லண்டனுக்கு அருகில் உள்ள ரிச்மணட், ஹேம்ஸ்டட் என்ற இடத்தில் 31.10.1878 அன்று பிறந்த ஹெர்பர்ட் ஆர்தர் பாப்ளி, ஹேக்னி இறையியல் கல்லூரியில் தனது பட்டப்படிப்பை முடித்தார். 1.10.1901-அன்று ப்ரைட்டன் நகர் தேவாலயத்தில் அருட்பொழிவு பெற்றார். 1901 -ம் ஆண்டு இந்தியாவில் இறை பணியாற்ற இலண்டன் மிஷன் சங்கத்தால் கல்கத்தாவிற்கு அனுப்பப்பட்டார். 1902-ம் ஆண்டு மாறுதல் பெற்று, ஈரோடு பகுதிக்கு வந்தார். அந்நாட்களில் ஈரோடில் தங்குவதற்கு போதுமான இடவசதியற்ற நிலையில், ஈரோடின் அருகிலுள்ள காஞ்சிக்கோயிலில் புதிதாகக் கட்டப்பட்ட லண்டன் மிஷன் பங்களாவில் தங்கி தமது மறைப் பணியை ஆற்றத் துவங்கினார். பாப்ளி அவர்கள் காஞ்சிக்கோயிலில் தங்கியிருந்து பணியாற்றிய லண்டன் மிஷன் பங்களா பாப்ளி பங்களா எனவும் பாப்ளி இல்லம் எனவும் அழைக்கப்படுகிறது. 9.12.1908 அன்று லிஸ்ஸி ஹில்டா ப்ரேக் (பெங்களூர் மிஷன் சபையைச் சார்ந்தவர்) என்பவருடன் திருமணம் நடைபெற்றது.

**பாடுகளின் வழியே பாப்ளி**

ஆரம்பத்தில் தமிழ் தெரியாதிருந்தாலும் தமிழின் மீது கொண்ட ஆர்வத்தால் தமிழ் கற்கத் தொடங்கினார். மிக எளிய, ஆடம்பரமற்ற, வாழ்க்கை முறையை வாழ்ந்தார். கிராமப் பகுதிகளில் பெரும்பாலும் நடந்து சென்று தான் இறைப்பணியாற்றியுள்ளார். கிபி. 1903-ம் ஆண்டு அருட்திரு. பாப்ளி அவர்களும், காஞ்சிக்கோயில் பகுதியின் முதல் சீர்திருத்தக் கிறித்துவரான ரீடர். சாமுவேல் அவர்களும், பட்டக்காரன் பாளையம் பகுதியில் இறைப்பணியாற்றிக் கொண்டிருக்கையில் அப்பகுதி மக்களால் தாக்கப்பட்டு, கள்ளி முட்களுக்குள் தூக்கி வீசப்பட்டனர். பாப்ளியின் உடலிருந்து சுமார் 60-க்கும் மேற்பட்ட கள்ளி முட்கள் பிடுங்கப்பட்டதாக அறிக்கை கூறுகிறது. அதே ஆண்டு ஈங்கூர் பகுதியில் நற்செய்தி அறிவித்துக் கொண்டிருந்த பாப்ளியை அப்பகுதியிலிருந்த மக்கள் சாட்டை, கம்பி போன்ற பொருட்களால் தாக்கியுள்ளனர். இவ்வாறு பலதரப்பட்ட எதிர்ப்புகள், அடி, அவமானம், வேதனைகளுக்கிடையிலும் பாப்ளி விதைத்த நற்செய்தி விதையானது இன்று வளர்ந்து ஆலமரமாகி, பரந்து விரிந்த கிளைகளுடன் ஈங்கூர் காஞ்சிக்கோயில் பட்டக்காரன்பாளையம் திருச்சபைகளாக வளர்ந்துள்ளது. 1902 முதல் 1904-ம் ஆண்டு வரை காஞ்சிக் கோயிலை மையமாகக் கொண்டு இறைப்பணியாற்றிய பாப்ளி 1905-ம் ஆண்டு ஈரோட்டிற்கு பணியிடமாற்றம் செய்யப்பட்டார்.

**ஈரோட்டில் லண்டன் மிஷன் சங்கத்திற்கு நிலம் வாங்குதல்**

அருட்திரு. H.A. பாப்ளி அவர்கள் ஈரோட்டிற்கு மாற்றலாகிய நேரத்தில் லண்டன் மிஷன் சொசைட்டிக்கென நிலம் தேவைப்பட்டது. அப்போது ஈரோடு துணை ஆட்சியர் அலுவலகம் உள்ளிட்ட பகுதிகள் அரசால் ஏலம் விடப்பட்டன. 1905-ம் ஆண்டு ஆகஸ்டு 5-ம் நாள், லண்டன் மிஷன் சங்கத்திற்கென சுமார் 12.46 ஏக்கர் பரப்பிலான நிலப்பரப்பு ரூ. 12910/-க்கு அரசு ஏலத்தின் மூலம் லண்டன் மிஷன் சங்கத்திற்கென கிரையம் செய்யப்பட்டது. அந்த இடத்தில் தான் மிஷன் சர்ச் என அழைக்கப்பட்டு பின்னாளில் அருட்திரு பிரப் அவர்களால் பேராலயமாகக் கட்டி எழுப்பப்பட்ட பிரப் தேவாலயம் சி.எஸ்.ஐ ஆண்கள் பள்ளி, பெண்கள் பள்ளி, ஈரோடின் முதல் மருத்துவமனையான கோஷா ஆஸ்பத்திரி எனப்படும் சிஎஸ்ஐ மருத்துவமனை ஆகியன அமைக்கப்பட்டுள்ளன. இவ்வாறு ஈரோட்டில் LMS திருச்சபை பிரப் அவர்களால் கட்டிஎழுப்பப்பட்டதெனில் அதற்கு அடித்தளம் அமைத்தவர் அருட்திரு. H.A. பாப்ளி ஆவார்.

**பாப்ளியின் இசையாற்றல்**

இங்கிலாந்தில் பிறந்து வளர்ந்தவரெனினும்,

அருட்திரு.H.A.பாப்ளி அவர்கள் இந்திய இசையின் மீது மிகுந்த ஈடுபாடு கொண்டிருந்தார். ஞாயிறு திருச்சபை ஆராதனைகளில், தமிழ்க் கீர்த்தனைகளைக் கொண்டு அருட்திரு.H.A.பாப்ளி அவர்கள் சொல்லும் கதாகாலட்ஜெபத்தை இரசிப்பதற்காக ஈரோடு பகுதியிலுள்ள கிறித்துவர் மட்டுமல்லாது இந்துக்கள், இஸ்லாமியர் போன்றோரும் ஆலயத்திற்கு வருவதை வழக்கமாக கொண்டிருந்தனர் என்பதில் இருந்தே பாப்ளியின் இசைப்புலமை வெளிப்படும். இந்திய இசை குறித்து கிபி.1921-ல் இவர் எழுதிய A The music of Indiati என்ற புத்தகத்தில் இவர் தம் இசையறிவும், ஈடுபாடும் இந்திய பூர்வீக இசை வல்லுநர்களையே வியப்பில் ஆழ்த்துகிறது. இது தவிர தமிழ்க் கீர்த்தனைகளை மாலை வேளைகளில் மக்கள் கூடும் பொது இடங்களில் நின்று பாடுவாராம். அப்போது ஆங்கிலேயர் ஒருவர் தமிழ்க் கீர்த்தனைகளைப் பாடுவதைக் கண்டு ஈரோட்டு மக்கள் வியப்புடன் கூடி நின்று ரசிப்பார்களாம். இவ்வாறு இசையின் மீது தீராப்பற்று கொண்ட பாப்ளி சென்னையில் 1927-ம் ஆண்டு YMCA தலைவராக இருந்த போது தம் சக ஊழியரான மேடம் கசின்ஸ் அவர்களின் துணையுடன் கிறிஸ்துமஸ் இசை விழாக்களை நடத்துவதற்காக அமெட்ராஸ் மியூசிக் அகாடமி என்ற இசைப்பள்ளியைத் துவக்கினார். இது பின்னாளில் மியூசிக் அகாடமி என அழைக்கப்படுகிறது. கிறிஸ்துமஸ் காலங்களில் தமிழ்க் கிறித்துவக் கீர்த்தனைப் பாடும் கீர்த்தனைத் திருவிழாக்களே பின்னாளில் மார்கழி இசை விழாக்களாக மாற்றம் பெற்றன. இந்த கீர்த்தனை திருவிழாக்களுக்கு வித்திட்டவர் அருட்திரு.H.A.பாப்ளி ஆவார்.

அருட்திரு.H.A.பாப்ளி அவர்கள் **'நொண்டி சிந்து'** என்றும் சிந்துப்பா பாடுவதில் வல்லவர். வேளாளர் பாப்ளி பாடிய **'நொண்டி சிந்து'** பாடலைக் கேட்ட கூட்டத்தினர், ஆங்கிலேயர் ஒருவர் அழகிய தமிழ்ப்பாடல்கள் பாடுவதைக் கண்டு வியப்புற்று நின்றனர்.

1918 சம்மர் ஸ்கூல் என்ற இசைப்பள்ளியை சென்னையில் துவங்கினார். இதில் இசை கற்பிக்கப்பட்டதுடன் திராவிட இசை எனப்பட்ட கர்நாடக சங்கீதத்தை கிறிஸ்த்துவ முறைப்படிக் கற்பிக்கப்பட்டது. சங்கீத கலாநிதி பட்டம் பெற்றவரும் வழக்கறிஞருமான பேராசிரியர் சாம்ப மூர்த்தி அவர்கள் இப்பள்ளியின் துணைமுதல்வராகவும் அருள்திரு பாப்ளி அவர்கள் முதல்வராகவும் சம காலத்தில் பணியாற்றினர்.

மேலும், தாழ்த்தப்பட்ட மக்களின் நலனுக்காகவும் வளர்ச்சிக்காகவும் தொடர்ந்து பல கட்டுரைகளை ஆங்கில இதழ்களான The guardian, The Harvest field ஆகியவற்றில் எழுதியுள்ளார். தாழ்த்தப்பட்ட மக்களின் பொருளாதார முன்னேற்றத்திற்காகப் பல்வேறு களப்பணியாற்றியுள்ளார்.

### பாப்ளியின் இலக்கியப் பணிகள்

இறைப்பணியாற்றுவதும், இசைத் திறனாற்றலும் மட்டுமின்றி இலக்கியத் துறையிலும் பல்வேறு படைப்புகளை அருட்திரு.H.A.பாப்ளி படைத்துள்ளார். இங்கிலாந்திலிருந்து வெளிவரும் The Guardian பத்திரிக்கையில் பாப்ளி எழுதிய பல கட்டுரைகள் இந்திய வரலாறு, கல்வி, லண்டன் மின் பணிகள், இசை, சமூக அமைப்பு போன்ற பல்வேறு வகையான தலைப்புகளில் வெளியிடப்பட்டுள்ளன. திருக்குறளை உலகறியச் செய்தவர் வரிசையில் அருட்திரு. பாப்ளி அவர்கட்கும் முக்கியப்



பங்குண்டு. உலகப் பொதுமறையாம் திருக்குறளின் சில பகுதிகளை ஆங்கிலத்தில் மொழிபெயர்த்து "A The Sacred Kural" என்ற தலைப்பில் புத்தகமாக வெளியிட்டுள்ளார். தம்மால் மொழிப்பெயர்த்து, தொகுக்கப்பட்ட திருக்குறள் தொகுப்பிற்கு "The Sacred Kural" எனத் தலைப்பிட்டதிலிருந்து திருக்குறளை முதன்முதலாக புனித நூல் எனக் கூறியவர் அருட்திரு.H.A.பாப்ளி ஆவார். 1916 முதல் 1932 வரை சென்னையில் உள்ள YMCA அமைப்பில் ஊழியராகப் பணியாற்றிய போது சுதந்திரப் போராட்ட வீரரும், இந்திய கல்வியாளருமான சேலம் K.T.பாலுடன் ஏற்பட்ட நட்பின் அடிப்படையில் அவர்தம் வாழ்க்கை வரலாற்றை தொகுத்து நூலாக வெளியிட்டுள்ளார். லண்டன் மிஷன் இறைப் பணியாளராக ஈரோடு மற்றும் அதன் சுற்றுப்புறங்களிலும் உருவாக்கப்பட்ட லண்டன் மிஷன் பள்ளிகளில் தாம் பணியாற்றிய அனுபவங்களைத் தொகுத்து The Village goes to School என்ற தலைப்பில் சிறு நூலாக அளித்துள்ளார். தமிழ்க் கிறித்துவக் கீர்த்தனைகளைத் தொகுக்கும் குழுவின் தலைவராக (ஐந்தாம் பதிப்பு 1950 ) பணியாற்றியுள்ளார். தமிழ் மொழி அகராதியை உருவாக்குவதற்காக மறைதிரு. சாண்ட்லர் தலைமையில் 1911-ஆம் ஆண்டு உருவாக்கப்பட்ட தமிழ் அகராதி குழுவின் (Tamil Lexican Committee)-ன் உறுப்பினராகவும் பணியாற்றி தமிழ் அகராதி உருவாவதிலும் பெரும் பங்காற்றியுள்ளார்.

### பாப்ளியின் கல்விப்பணிகள்

தமிழ்புலமையிலும் இசை அறிவிலும் சிறந்து விளங்கிய பாப்ளி அவர்கள், இவை மட்டுமே இறைப்பணி எனக்

கொள்ளாது, பணித்தளத்திலிருந்து சமூக கடைக்கோடி மக்களின் முன்னேற்றத்திற்காக அரும்பாடு பட்டுள்ளார். அக்காலத்தில் ஒடுக்கப்பட்ட மக்களின் கல்விக் கண் திறந்த லண்டன் மிஷன் பள்ளிகளின் வளர்ச்சிக்காக அயராது உழைத்தார். சமூக புறக்கணிப்பிற்கு உள்ளாக்கப்பட்ட மக்களின் வாழ்வாதாரத்திற்கு ஏட்டுக்கல்வி மட்டும் போதாது என்பதால் அக்காலத்தில் நவீன மயமாக்கப்பட்ட செய்முறைக் கல்வி முறையை (Project method Education) மிஷன் பள்ளிகளில் செயல்படுத்த முழுமுதற்காரணமாய் அமைந்தார்.

இதை தவிர, ஈரோட்டில் LMS பள்ளிகளில் பணியாற்றிய ஆசிரியர்களின் அறிவுத் திறனை மேன்மேலும் வளர்க்கும் வகையிலும் ஆசிரியர்கட்கிடையே தொடர்பை மேம்படுத்தவும், ஊக்கப்படுத்தவும் அருட்திரு.H.A.பாப்ளி தலைமையில் **‘நவீனக்கல்வி’** என்ற காலாண்டிதழ் வெளியிடப்பட்டுள்ளது.

மைசூர் மாகாணத்திலிருந்து வெளி வந்த The Harvest Field இதழில், அருட்திரு.H.A.பாப்ளி அவர்கள் எழுதிய கட்டுரையில், குருகுலமயமாக இருந்த இந்தியக் கல்வி முறையை, மாற்றி கல்வியை அனைவருக்குமானதாகப் பொதுமைப்படுத்தியதும், இந்தியநாட்டின் இழிநிலையெனக் கருதப்பட்ட மக்களுக்கும் கல்விக் கண் திறந்த பெருமை LMS பள்ளிகளையே சாரும். இந்த மிஷன் பள்ளிகள் மூலம் ஏழை, எளிய நிலையிலிருந்த சமூகத்தால் புறக்கணிக்கப்பட்ட சமூகத்தின் கடைக்கோடி மக்கள் கூட அரசுப்பணியில் பங்களிப்பதிலும் ஆசிரியராகப் பணியாற்றுவதற்கும் வாய்ப்பு கிட்டியது என்பதை ஆணித்தரமாக பாப்ளி விரித்துரைக்கின்றார்.

### மெட்ராஸ் கிறிஸ்துவக் கூட்டுறவு வங்கி - உருவாக்கம்

1915 ஆம் ஆண்டு ஏப்ரல்-ல் YMCA செயலாளராக நியமிக்கப்பட்டார். அந்நாட்களில் கிறிஸ்த்தவர்களுக்கு கடன் கொடுக்க பொதுத்துறை தனியார் மற்றும் அன்றைய கழக வங்கிகள் மறுத்தன எனவே YMCA அமைப்பின் உதவியுடன் மெட்ராஸ் கிறிஸ்தவ கூட்டுறவு வங்கி (21.6.1916) உருவாக்கப்பட்டது. அதன் உறுப்பினர்களில் ஒருவராக அருட்திரு.H.A.பாப்ளி பணியாற்றியுள்ளார். தம் வாழ்நாளில் இறுதிநாட்களில் பாப்ளி அவர்கள் வாழ்ந்த குன்னூரில் உள்ள குன்னூர் கூட்டுறவு நகர வங்கியின் இயக்குனராக பதவி வகித்துள்ளார் (Director of Coonoor Urban Coopeative Bank). ஈரோட்டில், அப்போதைய கல்வியாளரான மீனாட்சி சுந்தரம் முதலியார், சமூகச் சீர்திருத்தவாதி தந்தை பெரியார் ஆகியோருடன் மிகுந்த நெருங்கிய நட்பு கொண்டிருந்தார் அருட்திரு.H.A.பாப்ளி.

வடநாட்டு கிறிஸ்தவத் துறவி சாது சுந்தர் சிங் தென்னிந்தியாவிற்கு வருகைப் புரிந்த போது அருட்திரு.H.A.பாப்ளி அவர்கள் அவரை சந்தித்து சாது அவர்களின் இறைப்பணி குறித்தும், இந்திய கிறித்துவத்தை வளர்ப்பதில் இருவருக்குமிடையே இருந்த ஒற்றுமையை குறித்தும் கலந்தாலோசித்துள்ளதாக சாது சுந்தர் சிங்கின் தென்னிந்திய பயணக் குறிப்புகள் குறிப்பிடுகின்றன.

**அருட்திரு. அருளப்பன் என்பவர் குறிப்பிடுகையில் பாப்ளி அவர்கள் சமூகத்தை மாற்றுவதற்காக அல்ல, சமூகத்திற்குள்ளான மாற்றத்தை ஏற்படுத்தியதாகக் குறிப்பிடுகிறார்.**

இறைப்பணியாளராக பணியேற்றவர் இலக்கியம், இசை, இந்திய சமூக வளர்ச்சி என பல்துறை வித்தகராக விளங்கிய அருட்திரு.H.A.பாப்ளி அவர்கள் தமது இறுதி காலத்தை நீலகிரியில் உள்ள குன்னூரில் சன்பீம் (Sunbeam) என்ற பங்களாவில் வாழ்ந்து மறைந்தார். அவரது கல்லறை இன்றும் குன்னூர் All Saints ஆலய கல்லறைத் தோட்டமான டைகர் ஹில் (Tiger Hill) கல்லறை தோட்டத்தில் உள்ளது. மேலும் குன்னூர் All Saints ஆலயத்தில் அருட்திரு.H.A.பாப்ளி அவர்களால் அன்பளிப்பு செய்யப்பட்ட பெரிய பரிசுத்த வேதாகமம் இன்றும் திருச்சபை ஆராதனைகளில் பயன்படுத்தப்பட்டு வருகிறது.

அருட்திரு. அருளப்பன் என்பவர் குறிப்பிடுகையில் பாப்ளி அவர்கள் சமூகத்தை மாற்றுவதற்காக அல்ல, சமூகத்திற்குள்ளான மாற்றத்தை ஏற்படுத்தியதாகக் குறிப்பிடுகிறார்.

அருட்திரு.H.A.பாப்ளி-ன் இசைத் திறமையையும் இலக்கிய புலமையையும் பார்த்து வியந்த பகுத்தறிவுப் புலவர் குழந்தை அவர்கள், **‘பாப்ளி ஒரு பாப்புலி’** என சிலேடை படக் குறிப்பிட்டுள்ளார். இத்தகைய தமிழ்ப்புலமையும், இசைத் திறமையும் கொண்ட பாப்ளியை **‘தமிழ்ப்பாப்புலி’** என அழைப்பதே தகும்.

**ஈரோடு ரமேஷ்**

வச்சிரமணி கிறிஸ்தியான் வழி வந்த

# செந்தமிழ் புலவர் சங்கை சி.பி. ஞானமணி

கடந்த பதிவின் தொடர்ச்சி ..

**இலக்கியத்திறன்**

இதில் காணும் கடவுள் வாழ்த்து, மூவொரு கடவுளைச் சார்ந்த நேரிசை வெண்பாவில் அமைந்துள்ளது. “பாக்களிலே தூய்மையானது நேரிசை வெண்பா என்பர். இவர் இறைவனை இத்தூய்மையான இலக்கணக் கூறுகள் நிறைந்த வெண்பாவில் பாடியிருப்பதிலிருந்து இவரது பக்திநெறி நன்கு புலனாகிறது. அவையடக்கம், எழுசீர்க் கழிநெடியடி ஆசிரிய விருத்தம். ஒவ்வொரு அடியில் ஈற்றுச் சீர் (மறிஞர், கவிநூல், மனத்தின், அகலோன்) புளிமாவில் முடித்திருப்பது கவிஞர் இசைப்புலமையைக் காட்டுகிறது” என்று ஊரீஸ் கல்லூரி வேலூர் முன்னாள் தமிழ் துறை தலைவர் முனைவர் தே. செல்லையா அவர்கள் தனது ஆய்வு கட்டுரையில் கூறுகிறார்.

இவர் இயற்றிய **“திரியேகருக்கு நமஸ்காரம்”** என்ற முதற் பாடல் முகாரி இராகத்தில் ரூபக தாளத்தில் அமைந்துள்ளது.

ஏகதிரி யேகபரா சரணமையா சரணம்
ஏகோவா மாதேவா சரணமையா சரணம்
தேகமில்லாத் திருவடிவே சரணமையா சரணம்
திரியேகா! திரியேகா! சரணமையா சரணம்

இந்நூலில் இடையிடையே விருத்தம், தருக்கள், கலிவிருத்தம் போன்ற கவிகளுடன் இது கீர்த்தனைகளால் அமைந்துள்ளது.



Rev. C. P. Gnanamani

இவ்வாறு இக்கீர்த்தனைக் களஞ்சியத்தில் புலவரின் இலக்கியத் திறன் வெளிப்படுகிறது. கவிஞரின் பொழிப்பு இயைபுத் திறனைப் பற்றி முனைவர் தே. செல்லையா அவர்கள் கீழ்க்காணுமாறு எழுதுகிறார்.

“அடிதோறும் ஈற்றெழுத்தோ, அசையோ சீரோ மீண்டும் மீண்டும் வருமாறு தொடுப்பது இயைபுத் தொடை ஆகும். அளவடியில் சீர்தொறும் பார்க்கப்படுவது தொடை விகற்பமாகும். இயைபுத் தொடைக்கு மட்டும் பாடலின் ஈற்றுச் சீரிலிருந்து முதற்சீர் வரை விகற்பம் கணக்கிடப்பெறும். அவ்வாறு பார்க்கப்படும்போது முதல்சீரும், மூன்றாம் சீரும் மீண்டும் மீண்டும் ஈற்றெழுத்து வருமாயின் அது பொழிப்பு இயைபு எனப்படும். இச்செய்யுளழகில் “கேடர் பாளையத்தார் வியப்பு” (பாடல் 16) என்னும் தலைப்பில் அமைந்த கீழ்வரும் பாடல் அமைந்துள்ளது.

“மெத்த ஜெனங்கூடுதே - மிக்ககரம் பாடுதே
எத்திசையும் நாடுதே - எங்கள் மனம் வாடுதே
கலகலவென விலங்குதே - கம்பீரமாய்த் துலங்குதே
உலகமே முழங்குதே - உள்ளமெல்லாம் கலங்குதே

கீதசத்தங் கேட்குதே - நாதவெடி தீர்க்குதே
பல்லக்குகள் ஏகுதே - வண்டிகளும் வருகுதே”

இவ்வாறு இந்நூலின் வெண்பாக்கள், விருத்தங்கள் தொடைநயம் ஆகிய அனைத்தும் வழுவின்றி மெச்சும்படி அமைந்திருக்கின்றன. இத்தகைய தமிழ் இலக்கணக்கூறுகள் உள்ள பாடல்கள் இனியும் எழுமோ என ஏங்கும் நிலையே நிலவிவருகிறது.

**நாடகத்திறன்**

கெட்டகுமாரன் கதை ஓர் இறை உண்மையைப் புகட்ட புனையப்பட்ட கற்பனை உவமைக்கதையே.

ஆயினும் இச்சிறுகதையை ஒன்றை கேட்போரின் கருத்தும் உணர்வும் குன்றாமல், விரிவாக்கி, அதன் மூலக்கருத்துகளின் திட்ப நுாற்பங்கள் மங்காமல் குன்றாமல் இறை உண்மையை வலியுறுத்தி எடுத்துச்செல்லும் புலவரின் நாடகத்திறன் மெச்சத்தக்கதாகும்.

டம்பாச்சாரி மகன் தந்தையிடம் மன்றாடும் பாடலில்

மகன் = உம்முட போதனை புத்திகளை வைத்துக்
கட்டும் - இம்மி
ஒன்று குறையாம லென் பங்கை
இங்கு நீர் கொட்டும்
தந்தை = தம்முட தந்தை மொழியை மறுப்பது
தப்படா - நல்ல
தந்தையை விட்டுப்பிரிவது ஞானமோ
செப்படா

மேலும் தனது பாடலில் இறையியல் உண்மைகள் பலதை இடை இடையே புகுத்தி, பயன்தரும் அருள் உரை பாணியிலேயே கதை வளர்ந்து செல்கிறது.

இக் கிறிஸ்தவத் தமிழ் இலக்கியப் படைப்பின் சிறப்புகளை வரிசைப்படுத்தினால் அது நீளம். ஆகையால் அதன் சிறப்பு அம்சங்களைக் கூறுவதை நிறுத்தி அதன் துவக்கம் முடிவு ஆகியவற்றை மட்டும் கூறி நிறைவு செய்ய விரும்புகிறேன்.

**கதை ஆரம்பம்**

உன்னதனா ரேசுபரன்
சொன்ன உவமையிலே வருமந்த
மன்னிய சீமானுடைய சொந்த
மனைச் சிறப்பைக் கேளுமின்னே!
என இந்த உவமைக் கதை கப்பற்றரு என்ற தலைப்புடன்

செல்வமிந்தவராய் ஒரு சீமானிருந்தாராம்
சொல்வேன் முதன் முதலாய் அவன்
சொத்துக்களின் வளர்த்தை

எனத் துவங்குகிறது. சித்சபாபுரத்தில் செல்வமாக வாழும் ஸ்ரீசாதாத்த மகாராஜனுக்கு புத்திரபாக்கியமாக இரு மக்களிருந்தனர்.

தந்தைக்கு ரண்டு குமாரர் - வெகு
சந்தோஷ சம்பிரமான குபேரர்.

இதில் இளையவனோ பெற்றவர் பெரியோரை மதியாமல், இளைமையில் வளர்ந்த அவன் தன் தந்தையிடம் ஒரு விண்ணப்பம் செய்தான்.

தந்தையாரே,
எந்தனருமைக் குமாரனே, எந்தனின் தேனே - தர
ரலாத தொன்றையும் கேளாவிடில் தருவேன்

ஆண்டவர் கிறிஸ்து கூறிய உவமைக் கதையை இத்தகைய விளக்கத்துடன் பிரிவு செய்து, புலவர் தன் படைப்பைத் துவக்குகிறார். இந்த உவமைக் கதையில் காணும் தகப்பனின் அன்பை இறை தந்தையின் அன்புக்குப் புலவர் ஒப்பிட்டு படைத்துள்ள பாடல் காண்க.)

ஸ்ரீசதானந்தர் டம்பனைப் பற்றிக் கொண்ட ஆவல்

**கட்டளைக்கலித்துறை**

அப்பா அரசே அழகேயென் அன்பான ஆரமுதே!
ஒப்பா தெனையே மறந்துநீ இவ்வாறா யோடினதேன்?
இப்போ துடனேநீ வந்தாலுஞ் சேர்ப்பேனே என்னருகில்
எப்போ வருவாய் உனைமுத் திட்டாற என் மகனே!

"ஒருவரும் கெட்டுப்போகாமல் எல்லாரும் மனந்திரும்ப வேண்டுமென்று விரும்பி (தேவன்) நம்மேல் நீடிய பொறுமையுள்ளவராயிருக்கிறார்" (2 பேதுரு 3:9).

"துன்மார்க்கன் தன் வழியை விட்டுத் திரும்பிப் பிழைப்பதையே விரும்புகிறேன்" (எசே. 33:11).

இந்த உவமைக் கதையின் இறுதி கீர்த்தனையாக அமைந்திருக்கும் மங்களப் பாடலின் பொருள் ஆழத்தையும் அதன் கவி நயத்தையும் காண்க.

இராகம் இங்கிலீஷ் மங்களம் ஆதிதாளம்

**பல்லவி**

உதார வீர தீரனே - கெம்பீரனே
அனந்த மங்களம்!

**அனுபல்லவி**

சதா சுகா, மகாபரா, சசோருகா, சிறந்த மங்களம்!

**சரணங்கள்**

1 சமஸ்த ஜீவ ராசியுஞ் சராசரங்க ளும்படைத்தவா
நமஸ்துவே சுவஸ்துவே, மிகஸ்துதி நிறைந்த மங்களம் - உதா

2. மானுஷீக காயனே, ஜயங்காயனே மகாசகாயனே
ஞானஜீவ னானவான தியானனே சிறந்த மங்களம் - உதா

3. சாருமந்திர போதகா சர்வேசுரா சாந்திஸ் பிரஸ்துவே
ஆறுலக்ஷ ணப்பரா வரூபகா வனந்த மங்களம் - உதா

4. ஈன்றதாதை சான்றசே யீவினா வீயெனும்நமா
மூன்தொன்ற தானஞான மோனனேசு சுந்தமங்களம் - உதா




**சாந்திஸ் பிரஸ்துவே = பரிசுத்த ஆவியானவரே**

1900 ஆம் ஆண்டுக்கு முன்னதாக இயற்றப்பட்ட இக்கீர்த்தனையின் இராகம் ஆங்கிலம் என அமைந்துள்ளது. இதை இயற்றிய இசையறிஞர் தமிழ் ஆங்கில இசைகளில் வல்லுனர். எனவே ஆங்கில இராகத்தை தாம் இயற்றிய தமிழ் கீர்த்தனையில் புகுத்தியிருப்பது அவரது இசை ஞானத்தை எடுத்துரைக்கிறது.

இன்று தமிழ் இசை வல்லவரான ஒரு கிறித்தவ அன்பர் இப்பாடலுக்கு பொருளுக்கு ஏற்றவாறு இசையமைத்து நம் அனைவருக்கும் கற்றுக் கொடுக்க வேண்டும் என்ற கர்த்தர் மேல் கொண்டுள்ள காதல் மேலிட்டு வேண்டி இக்கட்டுரையை நிறைவு செய்கிறேன்.

**ந. ஜான் ஜெயானந்தம்**

## மிஷன் பணி தளங்களில்

# மிஷனெரிகளின் கல்விப் பணி

எனது தகப்பனார் அருள்திரு . R. ஜான் ஜீ.சாமுவேல் B.D., இந்திய மிஷனெரி - சங்கத்தின் மிஷனெரியாக தோர்ணக்கல்லில் (தெலுங்கானா) 1950 - 1977 வரை ஊழியம் செய்தார்கள்.

அவர் தோர்ணக்கல்லுக்கு முதலில் சென்ற போது, என் தகப்பனார் ஊழியத்திற்கு பல கிராமங்களுக்கு மாட்டு வண்டியில் சில நாட்கள் செல்ல வேண்டியது இருக்கும். அப்போது வீட்டில் அம்மாவுக்கு துணையாக அங்கு அருகில் கிரீட்டாபுரம் கிராமத்தில் இருந்து ஒரு பையனை சாயங்காலம் வந்து காலையில் போகச் சொன்னார்கள். அவன் பகலில் பள்ளிக்கூடம் செல்லவும் ஒழுங்கு செய்தார்கள். அதற்குரிய செலவுகளை ஏற்றுக்கொண்டர்கள். அவன் பின்னாளில் படித்து பள்ளியில் ஆசிரியராக பணியாற்றி. பின்னாளில் தலைமையாசிரியராகவும் ஆகிவிட்டான். அவனுடைய பிள்ளைகள் படித்து நல்ல வேலைகளில் ஹைதராபாத், கம்பம் போன்ற பட்டணங்களில் இருக்கிறார்கள். முலக்க தர்மராஜ் என்று பெயர்.

தகப்பனார் சிறுவனாக இருக்கும் போது, என் தாத்தா நல்லூர் திரு ராஜாமணி உபதேசியார் என்பவர் கிராம சபைக்கு உபதேசியராக இருந்தார்கள். SSLC க்கு மேல் படிக்க வைக்க கஷ்டப்பட்டார்கள். அதை அறிந்த ஆங்கிலேய மிஷனெரி Rev. Rupert Penn பாளையங்கோட்டை பரி.ஜான்ஸ் கல்லூரியில் Intermediate படிக்க உதவி செய்தார்கள். அதே போல் என் தகப்பனார் தோர்ணக்கல்லில் செய்தார். என்றால் மிகையாகாது.

தோரணக்கல்லில் ஊழியம் செய்த பொழுது அங்கே தெலுங்கு பேசுபவர்கள் மத்தியில் “லம்பாடிகளும்” பஞ்சாரா இனமக்களும் வாழ்ந்தார்கள். இவர்களுடைய மொழி, பழக்க வழக்கங்கள் மற்றவர்களை விட வேறுபட்டு இருந்தது. அவர்கள் தனியாக ‘தண்டா’ என்று அழைக்கப்படும் சிறு கிராமங்களில், தெலுங்கு ஜனங்களில் இருந்து தனித்து வாழ்ந்தார்கள். இவர்களில் சிலர் கிறிஸ்தவர்களான போது அவர்களுக்கு என அந்த தண்டாவிலேயே ஆலயம் கட்டிக் கொடுக்கப்பட்டது. பெரிய விழாக்களுக்கும் இவர்கள் பிள்ளைகள் படிப்பதற்கும் தோர்ணக்கல்லில் உள்ள கிறிஸ்த்தவ பள்ளிக்கூடம் வருவார்கள்.

தூரத்தில் உள்ள - தண்டாக்களில் இருந்து வரும் பிள்ளைகள் மற்ற தெலுங்கு பிள்ளைகளோடு விடுதியில் தங்குவதில் சிரமப்பட்டார்கள். அவர்களுக்கு ஒத்துவரவில்லை. அதனால் லம்பாடி விடுதி ஒன்று தனியே ஏற்படுத்தி பள்ளிக்கூடம் அனுப்பினார்கள். ஆனாலும் இந்த பிள்ளைகள் விடுதியை விட்டு தங்கள் தண்டாவுக்கு ஓடிப்போய் விடுவார்கள். அவர்களைப் நம் மிஷனெரிகள் திருப்பி கூட்டி வருவது வழக்கம். இப்படி ஓடிப் போய் சேர்க்கப்பட்டவன் தான் லால்சிங் லாசரஸ். மூன்று முறை ஓடிப் - போனவனை விடாமல் தேடி அழைத்து வந்தனர். நம் மிஷனெரிகளும் என் தகப்பனாரும். இப்படிப் படித்தவன் தான் பின்னாளில் குருப்பட்டம் பெற்று IMS -1 குருவாக லம்பாடி கிராமத்தில் ஊழியம் செய்தான். அவருடைய ஊழியம் மிகவும் சிறப்பாக அமைந்தது. ‘ஜாத்ரா’ எனப்படும் கன்வென்ஷன் கூட்டங்களை லம்பாடி மக்களுக்கு என்று தனியாக நடத்தினார். அதில் 3000, 5000 பேர் என்று அக்காலத்தில் பங்கு பெற்று அதிக லம்பாடிகள் கிறிஸ்துவைப் பின்பற்றினார்கள். ஆனால் அங்குள்ள தோர்ணக்கல் தெலுங்கு



சபையாருக்கு இது ஒரு சவாலாக எழும்பிற்று. ஆதலால் லால்சிங்கை தெலுங்கு சபைக்கு குருவாக இருக்கக் கட்டளை கொடுத்தார்கள். இவருடைய அழைப்போ, ஊழியமோ லம்பாடிகள் மத்தியில் சிறப்பாக நடைபெற்றது. ஆதலால் சிறிதுகாலம் அவர் மாறுதல் கொடுக்கக் கேட்டார். ஆனால் தோர்ணக்கல் பேராயர் இணங்கவில்லை. ஐ.எம்.எஸ்ம் இதில் தலையிட விரும்பவில்லை. ஆனால் கடவுள் ஏவினபடி ஹைதராபாத் அவர் சென்று லம்பாடிகளுக்கு என்று ஒரு சிறப்பு ஊழியம் ஆரம்பித்தார். அது ஆந்திரா, தெலுங்கானா, கர்நாடகா முழுவதும் பரவி சிறப்பாக நடைபெற்று கொண்டிருக்கிறது. Bharath Barigara Christian Sargh என்று நிறுவி பல ஆலயங்கள் சபைகள் சிறுபிள்ளைகளுக்கு விடுதி நடைபெற்றுக் கொண்டிருக்கிறது.

லால்சிங் லாசரஸ் கலியாணத்துக்கு ஆயத்தம் ஆகும் போது அப்போது இருந்த தோர்ணக்கல் பேராயர் அவனுக்கு ஒரு தெலுங்கு பெண்ணை திருமணம் செய்துகொள்ள சொன்னார்கள். ஆனால் அப்பொழுது என் தகப்பனார் அப்படி வேண்டாம் அவன் ஒரு லம்பாடி பெண்ணை விவாகம் செய்தால் அவன் லம்பாடி இன மக்கள் மத்தியில் செய்யும் ஊழியத்திற்கு தடையில்லாமல் இருக்கும் என்றார்கள், அவ்வாறு ஒரு லம்பாடி பெண்ணை செய்ததால் தெலுங்கானா லம்பாடி ஜனங்கள் மத்தியில் அவனுக்கு செல்வாக்கு குறையவில்லை, மற்றும் ஒரு சமயம் (இவையெல்லாம் 1960, 1970 இல் நடைபெற்றது) தெலுங்கு மாணவர் தங்கும் விடுதியில் ஒரு மாணவன் விடுமுறைக்கு வீடு சென்றவன் திரும்பவரவில்லை. உடனே என் தகப்பனார் (நான் B.SC., படித்து முடித்து வீட்டில் இருந்தேன்). என்னையும் அழைத்துக் கொண்டு அந்த கிராமத்துக்கு சென்றார்கள். அங்கு விசாரித்தால் அந்தக் கிராமம் முழுவதும் ஒரு ஜமீன்தார் வசம் இருப்பதால் அவர் சொல்லை மீறி வரமுடியவில்லை என்றார்கள். உடனே நாங்கள் ஜமீன்தார் வீட்டிற்குப் போய் பையனை அனுப்பக் கேட்டோம். அவர் சொன்னது என்ன தெரியுமா? இவனுக்கும், இவன் பெற்றோருக்கும் நான் சாப்பாட்டுக்கு உடைக்கு வேண்டியதெல்லாம் கொடுக்கிறேன். இவன் படித்து என்ன செய்யப் போகிறான் என்றார். என் தகப்பனார் அவரிடம் இவன் படிப்பில் நன்றாக தேர்ந்து வருகிறான். அவனை நடுவில் நிறுத்தாமல் முழுவதும் படித்து முடிக்க வைத்தால் தான் நல்லது. IMS அதைப் பார்த்துக் கொள்ளும். நீங்கள் அவனை விட்டு விடுங்கள் என்று கூறி அவனை மீண்டும் பள்ளி விடுதியில் சேர்த்தார்கள். இப்படி வட இந்தியாவில் பல கிராமங்களில் நடக்கிறது. கல்வி அந்த ஏழைகளுக்கு தர அவசியமில்லை என்று நினைப்பவர்கள் அங்கு இன்றும் இருக்கிறார்கள்.

**P A கிருபாகரன் சாமுவேல், சென்னை**

சேலம் – வரலாற்றுச் சிறப்பு மிக்க

# ஹோபார்ட் பெண் கல்வி இயக்கம்

ஆஸ்திரேலியா தீவு கண்டத்தின் கீழே உள்ள டாஸ்மேனியா என்ற குட்டித் தீவின் தலைநகரான ஹோபார்ட் மாநகரிலிருந்து வந்த பெண் திருத்தொண்டர்கள் தங்கள் ஊரின் நினைவாக பெண்கள் பள்ளி மற்றும் தங்கும் விடுதிக்கு 'ஹோபார்ட் பெண்கள் பள்ளி மற்றும் தங்கும் விடுதி' (Hobart Girls School & Girls Home) என பெயரிட்டார்கள். நடுநிலைப் பள்ளியாக செயல்பட்டு வந்த இந்த பள்ளி தற்பொழுது உயர்நிலைப் பள்ளியாக உயர்த்தப்பட்டு, தற்பொழுது CSI ஹோபார்ட் பெண்கள் உயர்நிலைப் பள்ளி என்றும் CSI பெண்கள் விடுதி என்றும் தொடர்ந்து, கடந்த 130 ஆண்டுகளாக பெண் கல்வி முயற்சிகளின் முன்னோடி ஸ்தலமாக திகழ்கிறது.

**பெண்களுக்கான முதல் ஆசிரியர் பயிற்சி பயிலகம்:**

சேலம் பகுதிகளில் பெண்கல்வி முயற்சிகளில் தீவிரமாக ஈடுபட்டிருந்த ஹோபார்ட் சகோதரிகளுக்கு ஆரம்ப கல்வி போதிக்கும் பெண் ஆசிரியர்கள் அதிகமாக தேவைப்பட்டனர். இதற்காக அப்பொழுது அவர்கள் ஆங்கிலேய அரசாங்கத்தையும், இதர தொண்டு நிறுவனங்களையும் நம்பி இருந்தனர். பெண்களுக்கான ஆசிரியர் பயிற்சி மையம் ஒன்று சேலத்தில் ஆரம்பிக்கப்பட்டால் அங்கே நாம் சிறந்த பெண் ஆசிரியைகளை உருவாக்க முடியும் என்று ஹோபார்ட் சகோதரிகள் நம்பினார்கள். மேலும் ஹோபார்ட் பெண்கள் பள்ளியில் நடுநிலைக்கல்வி வரை பயின்ற பெண் பிள்ளைகளுக்கு ஆசிரியர் பயிற்சி கொடுத்து நல்ல ஆசிரியைகளாக அவர்களை உருவாக்கலாம் என்றும் சகோதரிகள் நம்பினார்கள். ஹோபார்ட் சகோதரிகளின் உதவிக்கு வட இந்தியாவில் நற்செய்தி பணி செய்து வந்த சகோதரி ஸ்டேன்யன் அம்மையார் (Miss. Stanyon) உதவி செய்ய முன் வந்தார்.

கி.பி.1926ஆம் ஆண்டு ஜூன் மாதம் பெண்களுக்கான முதல் ஆசிரியர் பயிற்சி பயிலகம் (Training School for Women Teachers) சேலம் ஆலங்குட்டை பகுதியில் சேலம் மத்திய சிறைச்சாலை எதிரில் உள்ள மிசியோன் பங்களா வளாகத்தில் ஆரம்பிக்கப்பட்டது. (1876ல் கட்டப்பட்ட இந்த பங்களா இன்று CSI பல்தொழில்நுட்ப கல்லூரி நிர்வாக அலுவலகமாக செயல்படுகிறது.)

இந்த பயிலகத்தின் தலைமையாசிரியராக இந்தியரான சகோதரி சாலமோன் (Miss.Solomon) நியமிக்கப்பட்டார். தொடர்ந்து இங்கே இட நெருக்கடியில் தவித்து வந்த இந்த பயிலகத்திற்கான நிரந்தர கட்டுமானங்கள் சேலம் அஸ்தம்பட்டியில் உள்ள ஹோபார்ட் பெண்கல்வி இயக்க வளாகத்தில் புதியதாக கட்டுவதற்கு ஏற்பாடானது. இந்த புதிய கட்டிடங்களுக்கான அடிக்கல் நாட்டு விழா 1931ஆம் ஆண்டு அக்டோபர் மாதம் 16ஆம் நாள் நடந்தது. அப்பொழுது சென்னை மாகாண ஆளுநராக இருந்த லாட் பிரெட்ரிக் ஸ்டேன்லி என்பாரின் மனைவி சீமாட்டி பேட்ரிக்ஸ் ஸ்டேன்லி அம்மையாரால் (Lady Beatrix Stanley) கட்டிடங்களுக்கான அஸ்திபாரக்கல் பதிக்கப்பட்டது.

(நமது மேட்டூர் அணையைத் திறந்து வைத்தவர் லாட் பிரெட்ரிக் ஸ்டேன்லி என்பதும்,மேட்டூர் அணை இன்றும் அவர் பேரால் 'ஸ்டேன்லி நீர்த்தேக்கம்' என அழைக்கப் படுவதையும் நாம் அறிவோம்)

அன்றிலிருந்து இன்று வரை கடந்த 95 ஆண்டுகளாக இந்த பெண்களுக்கான ஆசிரியர் பயிற்சி பயிலகம் சேலம் மாநகரில் சிறப்புடன் செயல்பட்டு வருகிறது. இன்று CSI ஆசிரியர் பயிற்சி பயிலகம் என அழைக்கப்படும் இந்த நிறுவனம் பெண் கல்வி சேவையில் சிறந்து விளங்கி, நமது நாட்டிற்கு சிறந்த ஆசிரியைகளை உருவாக்கி மகத்தான கல்விப் பணி செய்துவருகிறது. இந்த பெண்களுக்கான CSI ஆசிரியர் பயிற்சி பயிலகம் (CSI Teacher Training Institute) வருகின்ற 2026ல் தனது நூற்றாண்டு நிறைவின் சேவையில் காலெடுத்து வைக்கும் பொன்னான நாளை எதிர்நோக்குகிறோம்.

சேலம் அஸ்தம்பட்டியில் உள்ள CSI ஹோபார்ட் பெண்கள் பள்ளி வளாகத்தில், பெண் திருத்தொண்டர்களின் நினைவிற்கு அர்ப்பணிக்கப்பட்ட சிற்றாலய சுவற்றில் பதிக்கப்பட்டுள்ள, சேலம் வந்து இந்த வளாகத்தில் சேவையாற்றிய பெண் திருத்தொண்டர்களின் நினைவு கல்வெட்டு.







கிறிஸ்தவ மிஷன் அமைப்புகள் மேற்கொண்ட கல்வி மற்றும் பெண் கல்வி முயற்சிகளால் பயனடைந்தோர் ஏராளம் ஏராளம். எனது பாட்டி, அம்மா, பெரியம்மாக்கள், சித்திமார்கள், அக்கா மற்றும் தங்கைமார்கள் இந்த சேலம் அஸ்தம்பட்டி ஹோபார்ட் பெண் கல்வி இயக்கத்தால் பயனடைந்தோரே. கல்வியும், நற்செய்தி அறிவிப்பும், மருத்துவ சேவையும், மிஷன் அமைப்புகளின் அருங்கொடைகள். ஒட்டுமொத்த சமுகத்திற்கும் அவர்கள் செய்த சேவைகளின் சாட்சிதான் இன்றும் நம்மிடம் நிலைத்திருக்கும் அன்று அவர்கள் துவக்கிவைத்த கல்விச்சாலைகள்.

**சேலம் வரலாற்றுச் சங்கத்திற்காக,**
**ஜே.பர்னபாஸ்,சேலம்**

## புத்தக அறிமுகம்

# திருமறை சொல்லகராதி

ஆசிரியர் அருள்திரு. இலாசரசு செல்வநாதன்
CSI ஆயர் -ஓய்வு

திருமறை சொல்லகராதி ( ஆசிரியர் அருள்திரு. இலாசரசு செல்வநாதன்)

அருள்திரு. இலாசரசு செல்வநாதன் தமிழார்வமும் இசைப் புலமையும், இறையியல் தெளிவும் மிக்க ஓய்வுபெற்ற (CSI) ஆயர் இவர். இவர் அமெரிக்கா, சிங்கப்பூர், மலேசியா, இஸ்ரேல், இலங்கை, இங்கிலாந்து ஆகிய நாடுகளுக்குச் சென்று கிறிஸ்தவ - தமிழ் மாநாடுகளில் ஆய்வுக் கட்டுரைகள் வழங்கி இறையிசையினை சொற்பொழிவு ஆற்றியும், காலட்சேபம் செய்தும் இறைப் பணியாற்றி வருகிறார். இவரின் 2005ல் ஓய்வுக்குப் பின்னும் ஊழியம் (1000 பிரதிகள்) 2006ல் ஈரைம்பது ஈடேற்ற கீர்த்த னைகள் (3000 பிரதிகள்) 2007ல் நீங்களே பாடலாம் (50,000 பிரதிகள்) 2008ல் கீர்த்த னைப் புதையல் (7000 பிரதிகள்) 2012ல் கிறிஸ்துகுல கீர்த்தனைகள் (CLS) (1000 பிரதிகள்) 2018ல் தினதியான கீர்த்தனைகள் (6000 பிரதிகள்) 2012ல் ஈரைம்பது உணர்வுப் பாடல்கள் (1000 பிரதிகள்) ஆகியவை இம்மட்டும் வெளிவந்துள்ளன.




கீர்த்தனை சீர்பரவுவார், கீர்த்தனைக்கடல், கீர்த்தனைகளின் மறுமலர்ச்சி ஆசிரியர், கீர்த்தனை ஆராய்ச்சி வல்லுநர், இசையிலக்கியப் பணியாளர், முத்தமிழ் ஆர்வலர், அருட்கவிஞர், கீர்த்தனை புரவலர், கீர்த்தனை செம்மல், வீரமாமுனிவர், எச்.ஏ. கிருஷ்ணபிள்ளை விருது முதலான 11 விருதுகளையும் பெற்றுள்ளளார். தொலைக்காட்சி தொடரிலும், சென்னைப் பல்கலைக் கழகத்திலும் கீர்த்தனை குறித்த சொற்பொழிவு நிகழ்த்தியவர். ஓய்வுக்குப் பின் 2500 இடங்களுக்கு மேல் சென்று பிரசங்கம், காலட்சேபம் செய்தவர்.

திருமறை சொல்லகராதி எனும் இவ்வழகிய தொகுப்பாக்கம் எவரும் பயன் கொள்ளத்தக்க இறையியல் பார்வை நூலாகும். திருமறையில் எபிரெய, கிரேக்க மூலங்களைக் கொண்ட சொற்களும், யூதப் பராம்பரியத்தின் பின்புலத்தில் புரிந்து கொள்ளப்பட வேண்டிய சொற்களும், இறையியல் சாரமாக அமைந்த கலைச் சொற்களும் விரவிக்கிடக்கின்றன. இவ்வகையில் அமைந்த 450க்கும் மேற்பட்ட சொற்களைத் தொகுத்து இறைப் பணியாளர்களும் பொதுநிலையினரின் பயன் கொள்ளத்தக்க வகையில் ஆயர் அவர்கள் இப்படைப்பை ஆக்கித்தந்துள்ளார்கள். நெருக்கடிகள் மிகுந்துள்ள இக்காலத்தில் திருமறையை நுணுக்கமாக அணுகி, பொருள் புரிந்து தியானிப்பதற்கு இவ்வகராதி ஒரு கைவிளக்கு.

**அருள்திரு. இலாசரசு செல்வநாதன்**
**94420 78744**

**விலை : ரூ.100/**